ஓம் தத் சத், பரப்பிரம்மனே நம:

ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் அருளிச்செய்த

# சசிவன்ன போதம்

## உரை நூல் இரண்டாம் பதிப்பு

கோபுராபுரம்

ஸ்ரீநந்தி பாராயணர்

உரையாசிரியர்

சிவனருட் செல்வர். ஜவகர் சுவாமிகள்

கணபதி பதிப்பகம், பாடியநல்லூர், சென்னை – 600 052.

8 - 2

ஓம் தத் சத்

பரப்பிரம்மனே நம :

ஸ்ரீ தத்துவராய சுவாமிகள்

அருளிச் செய்த

# சசிவன்ன போதம்

மூலமும்

ஜவஹர் சுவாமிகள்

இயற்றிய

விளக்க உரையும்

(இரண்டாம் பதிப்பு)




2013 விஜய வருடம்

கணபதி பதிப்பகம்

1/349, திருப்பூர் குமரன் தெரு, பாடியநல்லூர், சென்னை-52.

## நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சசிவன்னபோதம் |
| ஆசிரியர் | : | ஜவஹர் சுவாமிகள் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | எழுத்து தொகுப்பு |
| இரண்டாம் பதிப்பு | : | 2013 |
| நூலின் அளவு | : | 1/8 டெமி |
| பக்கங்கள் | : | 104 |
| தாள் | : | 11.6 |
| எழுத்து அளவு | : | 13 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சுக் கோர்ப்பு | : | **ஸ்ரீ வாரி பிரிண்டர்ஸ்** செங்குன்றம். |
| அச்சிட்டோர் | : | **ஸ்ரீ வாரி பிரிண்டர்ஸ்** செங்குன்றம். |
| வெளியீடு | : | **கணபதி பதிப்பகம்,** எண். 1/349, திருப்பூர் குமரன் தெரு, பாடியநல்லூர், சென்னை-52. |




பரப்பிரம்மனே நம :

### சகுண பிரம்ம வணக்கம்

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையு னாடு.

### பொருள் வணக்கம்

உலக முதற்பொருளை உம்பர்க்கு உணர்வரிதாம் பொருளை
ஓதிய வேதாகமத்தின் உச்சியின் உட்பொருளை
பலகலை பொருள்முடிவின் முடிவான பொருளை
பற்றற பற்றிய பெரியோர் பரவிய வான் பொருளை
அலை திவலை நுரை கடலில் உதித்தொடுங்குமாபோல்
அகிலாண்டம் உதித்தொடுங்கும் அதன்மூலப்பொருளை
இலகிய சற்குருவாகி யானாகும் அப்பொருளை எங்குமாம்
பரம் பொருளை யாமும் வணங்குதுமே.

### குரு பாத கமல வணக்கம்

(இந்நூல் உரையாசிரியர் இயற்றியது)

சீர்மிகு நாக வேட்டின் கண் சமாதி கொண்டமர்ந்து
அருள்புரிபவராம் அமலானந்த குருவும்
ஏற்றம் மிகு சென்னையம்பதியில் அவதரித்து தம்குருநாதர்
புகழ் எண்திசை பரப்பியவராம் லட்சுமணானந்த குருவும்
ஓர்மொழி யுட்கருத்தை நூதன விவேகி உள்ளத்
துணரச்செய்தவராம் கருணானந்த குருவும்
ஈர்த்தெம்மையாட் கொண்ட வேதாந்த விஞ்ஞான
ஏழுமலையானந்த குருவும் துணைதுணையரோ.

### அடியார் வணக்கம்

காலான பல்வித சற்கன்மங் களுக்கெல்லாம்
மேலான மெய்ஞ்ஞான விண்தலத்தின்-பாலான
மெய்யடியாரைத் தொழுவேன் வேதாந்த கீர்த்தனங்கள்
செய்ய மதி யோங்கத் தெளிந்து.

# ஸ்ரீ அச்சுததாசர் பாடல்

### பல்லவி

அனுபவிக்காதகலாது தர்மா தர்மம்
ஆகிய பூர்வஜன்மாந்த்ரம் செய் கர்மம் *(அனு)*

### அனுபல்லவி

தனுபுவன போகங்கள் தவிர்ந்தகுணோத் துங்க
சாந்தர்களாகிலும் ஏகாந்தர்க ளாகிலும் *(அனு)*

### சரணங்கள்

1. சுத்திகாரஜிதம் போல் மித்தைப் பெயரைக்கொண்ட
இத்தரையடங்கலும் சித்துருவெனக் கண்ட
முத்தர்களாகிலும் சித்தர்க ளாகிலும்
பத்தர்களாகிலும் பெத்தர்க ளாகிலும் *(அனு)*

2. ஏகசந்திரன் பொழியும் வாகுயரு மதுவைத்
தாகமுடனருந்திச் சோகமொழி பொதுவை
ராகிக ளாகிலும் யோகிக ளாகிலும்
போகிகளாகிலும் த்யாகிக ளாகிலும் *(அனு)*

3. ஆவலறுத்தோருளந் தாவுமொளி காட்சியாய்
மேவுமச்சுதகுருசத் பாவபரஞ் சாட்சியாய்
மூவர்களாகிலுந் தேவர்களாகிலும்
ஜீவர்களாகிலும் யாவர்களாகிலும் *(அனு)*



" எல்லாம் அவன் செயல் "

# பதிப்புரை

## கண்டிகை கிராம மனித நேய இளைஞர்கள் நற்பணி மன்றம்

கண்டிகை, பூதூர், சென்னை-67

கணபதி பதிப்பகத்தாரால் வெளியிடப்பெறும் இந்நூலை முதற் பதிப்பாக 2008-ம் ஆண்டு, பாடிய நல்லூர் விபு வித்யா பீடத்தாரால், ஆண்டு விழா நிகழ்வின் போது வெளியிடப்பட்டு, பல்லோரும் பயின்று தேடுதல்களை அதிகப்படுத்தி, மேலும் உள்முக ஆராய்ச்சிக்கு பயன்படுத்தி, அதனால் பெற்ற பயனை எல்லோரும் உணரும் வண்ணம் மீண்டுமொரு பதிப்பாக வர உள்ளதை மிகவும் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

எல்லோரது தேவைகளையும், தேடுதல்களையும் உணர்ந்து பலரும் பயனுறும் வண்ணம் புடமிட்ட தங்கம் மேலும் மேலும் புடமிட மின்னுவதைப் போல, இவ்வுரை நூல் ஒரு புடமிட்ட தங்கமாக மங்காத ஒளியுடன் தனித்தன்மையுடன் விஜய வருடம் தமிழ் வருடப் பிறப்பன்று இவ்வுலகிற்குள் பிரகாசிக்க உள்ளது என்பதற்கு முழு காரணகர்த்தாவாகிய இவ்வுரை ஆசிரியருக்கு பல கோடி வணக்கங்களை தெரிவித்து எல்லாம் வல்ல இறைக்கு அர்ப்பணிக்கிறோம்.

ஒரு உரை நூல் வெளிவருவது ஒவ்வொரு உரையாசிரியரின் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்தும் என்பதை அவர்கள் எழுத்துக்களே உணர்த்தி விடும். வேதாந்தத்தை முழு மூச்சாகவும் உயிரின் ஆதாரமாகவும் கொண்டுள்ள ஆசிரியர்,முழுமையான வேதாந்தத்தை வெளிப்படுத்தி, தான் பெற்ற அந்த இன்ப சுகத்தையும் ,பேரானந்தத்தையும் மற்றவர்களோடு பகிர்ந்து, தன் பிறவிப் பலனை நுகர்ந்து கொண்டுள்ளார் என்பதற்கு இந்நூல் சிறந்த உதாரணமாகிறது.

இவ்வுரையாசிரியர் இந்த நூற்றாண்டில் இதுவரை ஏழு நூல்களை சமர்ப்பித்து தனது எட்டாவது பதிவை சமர்ப்பிக்கிறார்.இதற்குக் காரணமான குருவின் அருளால், நன்குணர்ந்து செயல்படுகிறார் என்பதுமே உதாரணம்.

சொல்லின் வண்ணம் செயலும், செயலின் வண்ணம் வாழ்க்கையும், வாழ்க்கையின் வண்ணம் எழுத்தும் என்பது இந்த நூலினை படித்து உணரமுடியும். முதற் பதிப்பிற்கும் இப்பதிப்பிற்கும் இடைவெளி ஐந்தாண்டுகள் என்றாலும், அவர்களின் ஆராய்ச்சி பல ஆண்டுகளை உணர்த்துவது போல் உள்ளது என்பது இரண்டையும் படிக்கும் போது உணரமுடிகிறது.

இவ்வுரையாசிரியர் கேள்வி ஞானத்தால் பெற்ற அனுபவத்தை விட, பல உரைநூல்களை உள் வாங்கி அதனை ஆங்காங்கே அனைவரும் ஏற்கும் வண்ணம் உணர்த்தி தனக்கேயுரித்தான அத்தனித்தன்மையை வெளிச்ச -மிட்டுள்ளார்.

இவையனைத்தும் தனது ஆச்சாரியர்களுக்கு குரு மரியாதையாகவும், வள்ளல் தன்மையுடன் விளங்கியுள்ளதை அனைவரும் உணரலாம். உரையாசிரியரின் புலமை, பாண்டித்தியம், எழுத்தாழும் ஆகியவற்றை -யெல்லாம் நாங்கள் உணர்ந்திருந்தாலும், அவற்றை ஒரு சிற்றெறும்பு போல, எடுத்துச் சென்று எல்லோரிடமும் சேர்ப்பதை இறைவன் எங்களுக்கிட்ட கட்டளையாக ஏற்று, பொறுப்புடன் பணி புரிவோம் என்பதை எண்ணி எல்லாம் வல்ல இறைக்கு பல கோடி நமஸ்காரங்களை சமர்ப்பிக்கிறோம்.

எனவே அனைவரும் படித்து பயனுற்று ,பலருக்கும் அளித்து உலகிற்கு விளம்புவீர்களாயின், அதுவே உரையாசிரியருக்கு நாம் செலுத்தும் நன்றிக் கடனாக இருக்கும் என்று பணிந்து அர்ப்பணித்து மீண்டும் ஒரு வாய்ப்புக்காக தவமிருக்கிறோம் என்பதை பதிவு செய்து விடைபெறுகிறோம் .மேலும், இப்பதிப்பிற்காக அச்சுப் பணியாற்றி அழகூட்டிய ஸ்ரீ வாரி பிரிண்டர்ஸ், செங்குன்றம் அவர்களின் அளப்பரிய பணிக்கு ஆரமிட்டு வாழ்த்துகிறோம்.

மிகவும் நன்றியுடன்,

இவண்,

**கணபதி பதிப்பகத்தார்**

**கணபதி இல்லம்,**

எண். 1/349, திருப்பூர் குமரன் தெரு, பாடிய நல்லூர், சென்னை-52.



# முன்னுரை

(முதற் பதிப்பு)

இவ்வுலகில் வாழும் அனைவரும் விரும்புவது சுகத்தின் அடைவும், துக்கத்தின் நீக்கமுமே என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. சிலர் மனைவி, மக்கள், தனம் இவைகளை தனது சுகம் பொருட்டே தேடி அலைகின்றார்கள். தான தர்மங்கள் மூலம் துன்பங்களை நீக்குவதற்கு சிலர் முயலுகின்றார்கள். இன்னும் சில பேர்கள் சாத்திரங்களை அப்பியாசித்து, அதன் வழியில் ஏதேனும் பிரயோஜனம் உண்டாகுமா எனவும் முயற்சிக்கிறார்கள். இவ்விதமாய் வாழ்நாள் கழிந்து போய் அஞ்ஞானியாகவே வாழ்ந்து பின் காலக்கிரமத்தில் மரணத்தை எய்துகின்றனர்.

முற்பிறவியில் செய்த புண்ணிய கருமங்களின் விளைவால் நான்கு சாதனங்களையும் அடையப்பெற்று, ஞான குருவின் தரிசனம் கிடைக்கின்றது. குருவின் கிருபையால் ஈஸ்வரனால் ஆக்கப்பட்ட வேதங்களின் மகா வாக்கிய உபதேசம் பெற்று ஆத்மபுராணம், ஞான வாசிட்டம், விசாரசாகரம், விவேக சூடாமணி, பகவத் கீதை, பஞ்சதசி, கைவல்யம், நாநாஜீவவாத கட்டளை, ஒழிவிலொடுக்கம், அச்சுததாசர் கீர்த்தனைகள் முதலான அத்துவித சாத்திரங்களை சந்தேகமறக் கற்றுணர்ந்து ,விபரீத பாவனை நீங்கி, நிதித்தியாசனத்திலேயே இருந்து, பிரம்ம நிஷ்டராய், தூலசரீரம் உள்ளளவும் இந்த உலகத்தில் சீவன்முத்தனாய் உலகோருக்கு உபகாரமாய் வாழ்ந்து, விதேகமுத்தி பதம் அடையலாம் என்று நமக்கு முன்னர் வாழ்ந்த மகான்களின் சரித்திரங்கள் தெரிவிக்கின்றன.

இந்த ஞானம் விசாரிப்பதால் உண்டாகிறது. நான் யார்? உலகம் எப்படி வந்தது? துக்கங்களுக்கு காரணம் யாது? போன்ற பலவிதமான வினாக்களுக்கும் வேதாந்த விசாரணையை ,குருமுகமாகவும் சாத்திரங்களின் துணை கொண்டும் அறிந்து சகலரும் பரமானந்த பிராப்தி அடைய எல்லாம் வல்ல ஈஸ்வரனை வணங்கி இந்த நூலை அர்ப்பணிக்கின்றோம்.

இங்ஙனம்,

புதூர், அம்பத்தூர்.

03-02-2008.

**ஜவஹர் சுவாமிகள்**

# சமர்ப்பணம்



## ஸ்ரீமத் லோகநாத சுவாமிகள்

சசிவன்னபோதம் என்னும் இந்த சாத்திரம் ஞானிக்கு பணிவிடை செய்து, அதன் பலனால் நான்கு சாதனங்களும் கைவரப்பெற்று, குரு ஞானோபதேசத்தால் முத்தி அடைந்த ஒரு சீவன்முத்தனின் சரித்திரமாகும். இது போன்றே நாகவேடு எனும் திருத்தலத்திலே சமாதி கொண்டு அருள் புரிந்து கொண்டிருக்கின்ற ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகளின் வேதாந்த மடாலயத்தைச் சார்ந்த **ஸ்ரீமத் லோகநாத சுவாமிகள்** எனும் பூர்வாசிரம நாமம் கொண்ட **வியாசர்பாடி சுவாமிகள்,** அமலானந்த சுவாமிகள், அவரது சீடர் இலட்சுமணானந்த சுவாமிகள் முதலான குருமார்களுக்கெல்லாம் பணிவிடை செய்து, குரு உபதேசத்தால் ஞானமடைந்து சீவன்முத்தராயும், சதாசர்வ காலமும் சிவபுராணத்தை ஓதிக் கொண்டும் நம்மிடையே வாழ்ந்து, 2005-ம் ஆண்டு விதேக கைவல்யம் அடைந்தது நாம் அனைவரும் அறிந்ததே. விளக்க உரையோடு கூடிய இந்தச் சாத்திரத்தை வியாசர்பாடி சுவாமிகளுக்கு சமர்ப்பணம் செய்து சுவாமிகளின் குருவருளுக்கும் திருவருளுக்கும் பாத்திரமாவோமாக.



# முன்னுரை

(இரண்டாம் பதிப்பு)

சசிவன்ன போதம் என்னும் இந்த நூல் சுத்தாத்வைத தத்துவ ஞானத்தைப் பிரதிபாதிக்கின்ற ஒரு வேதாந்த சாத்திரமாகும். கைவல்ய நவநீதம் போன்றே இதிலும் தத்துவமசி மகாவாக்கியத்தை குரு சீடனுக்கு போதிப்பதற்கு முன், அவனை சிரவணம், மனனம் ஆகியவற்றால் பக்குவப்படுத்தி உபதேசிக்க வேண்டும் என்று கூறப்படுகிறது. மேலும், தத்துவராய சுவாமிகள், தாண்டவராய சுவாமிகள், மெய்கண்ட தேவர் ஆகிய இம்மூவரும் சமகாலத்தவராக இருத்தல் வேண்டும். அதனால்தான் சிவஞான போதம். சசிவன்ன போதம், கைவல்ய நவநீதம் ஆகிய இம்மூன்றும் அத்துவித மார்க்கத்தையே பிரதிபாதிக்கின்ற நூல்களாக அமைந்திருக்கின்றன என்பது தெளிவு.

எம்மால் விளக்கவுரை எழுதப்பட்டு, பாடியநல்லூர் **விபு வித்யா பீடத்தாரால் 2008-ம்** ஆண்டில் இலவசமாக வெளியிடப்பட்ட, இந்நூல் வேதாந்த மெய்யன்பர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாக அமைந்தது என்பதைக் கூறவும் வேண்டுமோ? தற்காலத்தே வேதாந்த தத்துவத்தை அறிய விழைவோர் பெருமளவில் குறைந்து வருவதாலும், ஜனங்கள் கர்ம, பக்தி, யோக மார்க்கங்களில் ஆழ்ந்து போனதாலும் , அக்காரணங்களால் தத்துவ ஞான நூற்கள் வெளியிடப்படாமையாலும் மெய்யன்பர்கள் மிகுந்த அறிவு தாகத்துடன் இருக்கிறார்கள் என்ற காரணத்தினாலேயே இந்நூல் நல்ல வரவேற்பைப் பெற்றது எனலாம்.

இதனை நன்குணர்ந்த **கண்டிகை மனித நேய இளைஞர் நற்பணி மன்றத்தின்** நிறுவனரான **தீர்க்கதரிசி தியாகராஜ சுவாமிகள்,** சசிவன்ன போதம் என்கின்ற இந்த வேதாந்த நூலை அன்பர்கள் பலரின் வேண்டுகோட்கு இணங்க, தனது இல்லத்தில் வருடா வருடம் நடத்துகின்ற சித்திரை விழாவில், விஜய ஆண்டு முதல் நாள் (14-04-2013) அன்று இலவச பதிப்பாக வெளியிட்டு அர்ப்பணிக்கின்றார்கள். கடந்த சில ஆண்டுகளாக கிடைத்தற்கு அரியதான நூற்களை தகுந்த அறிஞர்களைக் கொண்டு விளக்க உரைகளோடு தனது பொருட்செலவில் அச்சிட்டு, இலவசமாக, தீர்க்கதரிசி அவர்கள் வெளியிட்டு வருகிறார்கள் என்பது அனைவரும் அறிந்த ஒன்றே. ஈசுரார்ப்பணமாக இது போன்று உலகோருக்கு நன்மை தரும் காரியங்களை இடைவிடாது ஆற்றி வருகின்ற **தீர்க்கதரிசி தியாகராஜ சுவாமிகளும்,** இது போன்ற நற்காரியங்களுக்கு எப்போதும் துணைபுரியும் அன்னாரின் **குடும்பத்தாருக்கும்** எமது ஆசிர்வாதமும். எல்லாம் வல்ல ஈஸ்வரனின் அருளும் உரித்தாகட்டுமாக .

இங்ஙனம்,

புதூர், அம்பத்தூர்.

03-04-2013

**ஜவஹர் சுவாமிகள்**

## நூலின் அவதாரிகை

சசிவன்ன போதம் என்னும் இந்த நூல் தமிழ்மொழியில் இயற்றப்பட்ட மிகச் சிறந்ததொரு வேதாந்த சாத்திரமாகும். இந்நூலை இயற்றிய மகான் தத்துவராய சுவாமிகள் ஆவார். இவரால் ஆக்கப்பட்ட மோகவதைப் பரணியில் ஒரு பிரகரணமாக இந்நூலைச் செய்தார். இந்த நூலை ஆக்கியதே இவரது குருவினது கடாட்சத்தினால்தான் என்பது ஒரு சம்பவத்தினால் தெரிய வருகின்றது.

ஒரு சமயம் தனது குருநாதரான ஸ்ரீமத் சொரூபானந்த சுவாமிகளிடம், தான் இயற்றிய திருவருட்கழன் மாலை, போற்றி மாலை, புகழ்ச்சி மாலை முதலான சாத்திரங்களை பாடிக்கொண்டிருக்கும் சமயம், இவரது குரு சொரூபானந்த சுவாமிகள் இந்நூல்கள் மிகவும் பாண்டித்தியம் உள்ளவருக்கே யன்றி மந்தருக்கு உதவாது என்றிடவும், தனது குருநாதரின் திருவுள்ளத்தை உணர்ந்தவராய், குருநாதர் நித்திய கடமைகளான ஸ்நானாதிகளை முடித்து, பின்னர் பூஜைகள், சீடர்களுக்கு போதித்தல், ஏனையோருக்கு ஆசிர்வாதம் செய்தல், முதலியவைகளை யெல்லாம் முடித்து, பின்னர் உணவு சாப்பிட வரும் சமயம், எல்லோருக்கும் பிரயோஜனப்படும் விதத்தில், **சூதசங்கிதையில்** விஷ்ணுவிற்கு மகாதேவர் கூறும் **முத்தி கண்டத்தின்** ஏழாவது அத்தியாயத்தில் **ஞானிக்கு பணிவிடை** செய்வதன் மூலமாக ஞானம் பெற்ற **சசிவன்னன்** கதையை மிக எளிமையாக, வேதாந்த தத்துவங்களை மந்தரும் அறிந்து கொள்ளும் விதமாக **சசிவன்ன போதம்** என்ற தலைப்பிட்டு, தனது குருவின் காலடியில் வைத்து வணங்கினார். அதைக் கண்ணுற்ற குருநாதரும் சீடன் சுவானுபூதி பெற்றதை உணர்ந்தவராய் பேரானந்தம் அடைந்தார்.

சசிவர்ண ஞானியின் சமாதி சத்தீஸ்வரம் என்னும் கோபர்வதம் (கோபுராபுரம்) என்ற திருத்தலத்திலுள்ள **சத்தீஸ்வரர்** ஆலயத்தில், அவரது குரு மானந்தி பராயணரது சமாதியின் எதிரே அமைந்துள்ளது. இத்தலம் விருத்தாசலத்திலிருந்து 6 கி.மீ. தூரத்திலும், சுவாமிகளின் அதிஷ்டானத் திலிருந்து 20 கி.மீ.தூரத்திலும் உள்ளது.

தத்துவராய சுவாமிகளினால் இயற்றப் பெற்ற இந்நூல் புத்திக் கூர்மை இன்றிய மந்தர்களின் நலம் பொருட்டு எளிதாக யாவரும் வேதாந்த தத்துவங்களை உணரும் வண்ணம்-திருக்குறளைப் படிக்கும் போது அதன் அர்த்தங்கள் எவ்விதமாய் சுவையைக் கொடுக்கின்றதோ அதேபோல - இந்நூலும் படிக்க படிக்க, **கறந்த பால் கன்னலொடு நெய் கலந்தாற் போல சிறந்த அடியார் சிந்தனையுள் தேனூறி நின்று** என்று மாணிக்கவாசகப் பெருமான் சிவ புராணத்தில் பாடுவதே போன்று, அனர்த்தமான மறதியைக் கெடுத்து தன் அறிவினால் காண வைக்கிறது. சாம வேதத்து சாந்தோக்கிய உபநிஷத்தின் 6-ம் பிரபாடகத்தில் உத்தாலகர் சுவேதகேதுவிற்கு சொல்கின்ற போதனைகளை இந்நூலில் எடுத்துக் கையாண்டிருப்பதும், சூதசங்கி தையிலுள்ள 25 பாடல்களையும், பொருள் மாறாமல் சுருக்கமாகச் சொல்வதும் சுவாமிகளின் தமிழ்ப் புலமையை தெள்ளிதின் உணர வைக்கிறது.



தத்துவ ஞானம் அடைய குரு உபதேசம் வேண்டும். குரு தரிசனம் பெற வேண்டிடில், நான்கு சாதனங்களான நித்தியாநித்திய வஸ்து விவேகம், இகமுத்திரார்த்த பரபோக விராகம், சமாதிஷட்க சம்பத்து, முமூட்சுத்துவம் ஆகியன இருத்தல் வேண்டும். இச்சாதனங்கள் விட்சேபம் (சித்த சஞ்சலம்) நீங்கியவருக்குத்தான் உண்டாகும். விட்சேபம் நீங்குவதற்கு ஈஸ்வர நமோச்சரணம் செய்தல் வேண்டும். இதற்கு பாவங்கள் ஒழிய வேண்டும். பாவங்கள் ஒழிய. நிஷ்காமிய கர்மங்கள் புரிய வேண்டும் என்று சாத்திரங்கள் கூறும்.

**புணர்ந்த பாவமெலாம் பரிபூரணம் உணர்ந்த ஞானி விழிபட ஓடுமே** என்று தத்துவராய சுவாமிகள் இந்நூலின் ஆரம்பத்திலேயே கூறியது தற்காலத்து நடைமுறையை அனுசரித்தே. மகான்களின் குரு பூஜைகளில் கலந்து கொள்ளும் காலத்தே, அக்குரு மகானின் குருவருள் கிடைப்பதோடு மட்டுமின்றி, அவ்விடத்திற்கு வருகின்ற பிரம்ம ஞானியரின் ஞானக் கண் பார்வையும் படுமானால், பாவங்கள் நிச்சயமாக ஒழியும். இதில் எவ்வித ஐயமும்கொள்ள வேண்டியதில்லை என்பதற்காகவே **பாவங்கள்** நீங்கும் அல்லது ஒழியும் என்று கூறாது **ஓடுமே** என்று திடப்படக் கூறினார் .

அதுமட்டுமல்லாது, பிரம்ம ஞானிக்கு சேவை செய்வதன் மூலமாக நான்கு சாதனங்களும் உண்டாகும் என்று **நன்றாமுனிதாள் வழிபாடு அதனால்................ உத்தமர்கட்குள சாதன நாலும் உதித்தனவே.** என்று 17- வது பாடலில் கூறுகிறார். இதற்கு திருஷ்டாந்தமாக, குருமார்களுக்கு - நாகவேடு **ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகள்** முதலானோருக்கு - சேவைகள் புரிந்ததன் பலனாக நான்கு சாதனங்களும் அடையப்பெற்றதனால் தத்துவ ஞானமடைந்து முக்தி பேறுற்றவர். **லோகநாத சுவாமிகள்** எனும் பூர்வாசிரம நாமமுடைய **வியாசர்பாடி சுவாமிகள்** என்று சொல்லலாம். இவ்வாற்றால் பிரம்ம ஞானிக்கு சேவை புரியும் பாக்கியத்தை நம் போன்றோரும் பெற்று வீடு பேறு அடைய வேண்டி அந்த எல்லாம் வல்ல ஈஸ்வரனை நமஸ்கரிக்கின்றோம்.

**ஜவஹர் சுவாமிகள்**

பரப்பிரம்மனே நம:

## ஸ்ரீ தத்துவராய சுவாமிகள்

அருளிச்செய்த

# சசிவன்ன போதம்

### பொருள் வணக்கம்

மதிபருதி யெரிநீர் கால் வானவனி இயமானன் வடிவாயெல்லாம்
அதிபதியா யனைத்துமா யல்லாத அறிவுருவை அகத்துள் வைப்பாம்.

**பதவுரை:** மதி பருதி எரி நீர் கால் வான் அவனி இயமானன் வடிவாயெல்லாம் = சந்திரன், சூரியன், தேயு (அக்கினி), அப்பு (நீர்), வாயு (காற்று), ஆகாயம், நிலம் (பூமி), ஜீவன் முதலிய ரூபமாய் இருக்கின்ற எல்லாவற்றிற்கும்; அதிபதியாய் = ஆதார தலைவனாகவும்; அனைத்துமாய் அல்லாத அறிவுருவை அகத்துள் வைப்பாம். = அவ்வனைத்துமாய் அல்லாததுமான சுத்தபிரம்மத்தை உள்ளத்தின் கண் வைத்திருப்போம்.

**பொழிப்புரை:** சந்திரன், சூரியன், தேயு(அக்கினி), அப்பு(நீர்), வாயு (காற்று), ஆகாயம், நிலம் (பூமி), ஜீவன் முதலிய ரூபமாய் இருக்கின்ற எல்லாவற்றிற்கும் ஆதார தலைவனாகவும், அவ்வனைத்துமாய் அல்லாததுமான சுத்த பிரம்மத்தை உள்ளத்தின் கண் வைத்திருப்போம்.

### கடவுள் வணக்கம்

சொல்லாற்றம் மதிவிரகால் தூயதிது தீயதிது என்னு மாக்கள்
எல்லார்க்கும் அதுவதுவாய் இறையிருக்கும் படியேயாய் இருக்கவென்றே.

**பதவுரை:** சொல்லால்=பேசும் திறமையினால்; தம் மதி விரகால் = தனது புத்தி சாதுரியத்தால்; தூயதிது தீயதிது என்னு மாக்கள் = இது தூய்மையானது அல்லது தீமையானது என்பர் பகுத்தறிவிலாதவர்கள்; எல்லார்க்கும் அதுவதுவாய்= சகலருக்கும் அப்பொருள் அவரவர் நினைவிலுள்ள; இறையிருக்கும் படியேயாய் இருக்க வென்றே= கடவுள் இருக்க வேண்டுவதாய் இருக்கட்டும்.

**பொழிப்புரை:** பேசும் திறமையினாலும், தனது புத்தி சாதுரியத்தாலும் இது தூய்மையானது அல்லது தீமையானது என்போர் பகுத்தறிவிலாதவர்கள். சகலருக்கும் அப்பொருள் அவரவர் நினைவிலுள்ள, கடவுளாக இருக்க வேண்டுவதாய் இருக்கட்டும்.

**விளக்கம்:** சிவன், விஷ்ணு, தேவி, விநாயகர், முருகன், சூரியன் ஆகிய அந்தந்த சமயங்களுக்கான தெய்வத்தை வழிபடுவோருக்கு அந்த பரப்பிரம்மம் **அதுவதுவாய் இறையிருக்கும் படியேயாய் இருக்க** என்கிறார் .



அந்தரியாமி, இரண்யகர்ப்பன், விராட்புருடன், பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், தேவேந்திரன், அக்கினி, விக்கினேசன், பைரவர், தோஷமற்ற மயிராலம், மாரியம்மன், இராட்சதர்கள், யட்சர்கள், பிராமணர்கள் முதலான வருணத்தார், மிருகங்கள், பட்சிகள், அரசு, ஆல் முதலிய மரங்கள், நெல், கோதுமை முதலிய தானியங்கள், நீர், சிலை, மண், விறகு, மிளிரும் வாச்சி, குந்தாலம் போன்ற ஆயுதங்கள் அனைத்தையும் நேசத்தோடு பரமேஸ்வரனது திருமேனி என்று கருதி வணங்கப்பட்டவர்களாய், அந்தந்த பூஜைக்குரிய பலன்களைக் கொடுப்பவர்களாவர். **ஸ்ரீபஞ்சதசி-சித்திர தீபம்.**

### குரு வணக்கம்

படைப்பானும் வியன்ஞாலங் காக்கும் ஆழிப்
படையானும் படைத்தளிக்கப் பட்ட வெல்லாந்
துடைப்பானும் சுருதிகளுந் தொழுது போற்றும்
சொரூபானந் தச்சுடரைத் தொழுதல் செய்வாம்.

**பதவுரை:** படைப்பானும் = சிருஷ்டிக் கர்த்தாவான பிரம்மாவும்; வியன் ஞாலங் காக்கும் ஆழிப்படையானும்= வானோரையும், பூமியிலுள்ளோரையும் காக்கின்றவனும், பாற்கடலை படுக்கையாக கொண்டுள்ளவனுமான விஷ்ணுவும்; படைத்து அளிக்கப்பட்ட எல்லாம் துடைப்பானும் = சிருஷ்டித்து, காக்கப்பட்ட அனைத்தையும் சங்காரம் செய்யும் ருத்திரனும்; சுருதிகளும்= சாத்திரங்களும்; தொழுது போற்றும்= வணங்கி உபசரிக்கும்; சொரூபானந்தச் சுடரைத் தொழுதல் செய்வாம்=எமது குருநாதர் சொரூபானந்த ஜோதியை நமஸ்கரிப்பாம்.

**பொழிப்புரை:** சிருஷ்டிக் கர்த்தாவான பிரம்மாவும், வானோரையும், பூமியிலுள்ளோரையும் காக்கின்றவனும், பாற்கடலை படுக்கையாக கொண்டுள்ளவனுமாகிய விஷ்ணுவும், சிருஷ்டித்து காக்கப்பட்ட அனைத்தையும் சங்காரம் செய்யும் ருத்திரனும், சாத்திரங்களும் வணங்கி உபசரிக்கும் எமது குருநாதர் சொரூபானந்த ஜோதியை நமஸ்கரிப்பாம்.



# நூல்

## அவதாரிகை

**மாணாக்கன், சம்பந்தம், விஷயம், பிரயோஜனம்** எனும் இந்த நான்கிற்கும் அனுபந்தம் என்று பெயர்.எல்லா நூற்களிலும் இந்த நான்கு அனுபந்தங்களும் இருக்கும்.தன்னையறிவதற்கு எது மாணாக்கனை நூலோடு சம்பந்தப்படுத்துகின்றதோ அது அனுபந்தமாம்.அனுபந்தத்தை அறியாவிடில் விவேகம் உடையோனுக்கு சாத்திரத்தின் கண் ஈடுபாடு உண்டாகாது.எந்த அனுபந்தத்தை அறிதலால் மாணாக்கன் இந்நூலைக் கேட்பானோ அந்த அனுபந்தத்தை **1- முதல் 4**-வரையிலுமுள்ள பாடல்களில் கூறுகிறார்.

*இந்நூலில் பரமானந்த பிராப்தியை அடையப் பெறும் வழியைக் கூறுகிறேன் எனல்* **(பிரயோஜனம்)**

அலகை அச்ச மறஅக வான்களும்
உலகின் முத்தி பெறும்பரிசு ஓதுவாம் (1)

**பதவுரை:** அலகை அச்சமற = பேதப் பேய்களின் பயம் தெளிய ;அகவான்களும் உலகின் = இப்பூவுலகில் வாழும் சீவபாவத்திலிருப்போர்; முத்தி பெறும் பரிசு ஓதுவாம் = பரமானந்த ப்ராப்தி என்கின்ற மோட்ச வீட்டினை அடைய, வெகுமதியாக இந்நூலின் வழியாய் சொல்லுகின்றேன்.

**பொழிப்புரை:**இப்பூவுலகில் வாழும் சீவபாவத்தில் இருப்போர்களிடமுள்ள பேதப் பேய்களின் பயம் தெளியவும், பரமானந்த ப்ராப்தி என்கின்ற மோட்ச வீட்டினை அடையவும், இந்நூலை வெகுமதியாகக் கொடுத்து, அந்த வழியைச் சொல்லுகின்றேன்.

**விளக்கம்:** அலகை என்றால் பேய். **சனன வன்காட்டில் மோகத்தமத்து எழுப் பேதப் பேய்கள்** என்று கைவல்யம் கூறுகிறது. (பிறவி என்னும் கொடுமையான காட்டில் மயக்கத்தைக் கொடுக்கும் அஞ்ஞானத்தால் எழுகின்ற பேதம் எனும் பேய்கள் .) துவிதமான பேதமே பேய் என்றாகிறது. ஈஸ்வர சீவ பேதம், சீவ சீவ பேதம்,சீவ சட பேதம், ஈஸ்வர சட பேதம், சட சடபேதம் என பேதங்கள் ஐவகையாகும்.

**பேதங்களின் விளக்கம்:** ஈஸ்வர சீவ பேதம் = ஈஸ்வரன் சர்வத்தையும் உணர்பவன், சீவன் அற்ப உணர்வு உடையவன்;சீவ சீவ பேதம் = மாநுடன், விலங்கு, அந்தணன், சூத்திரன் முதலானவைகள் போலவாம் ; சீவ சட பேதம் = சீவர் சேதனத் தன்மையுடையோர், சடங்கள் மூடமானவை ; ஈஸ்வர சட பேதம் = கயிற்றிற்கும் கற்பித பாம்பிற்கும் உள்ள பேதம் போலவாம் ; சட சட பேதம் = கடமும் படமும் போலவாம்.



இம்முதலாவது பாடலில் **பிரயோஜனத்தைக்** கூறுகிறார். அஞ்ஞானமும், அஞ்ஞானத்தின் காரியமான பிரபஞ்சமும் பிறப்பு இறப்பு எனும் துக்கத்திற்கு காரணமாய் இருப்பதால்,அதன் நிவர்த்தியும்,பரமானந்தப் பிராப்தியும் மோட்சம் எனப்படும்.மோட்சம் நூலின் பரம பிரயோஜனமாம்.நூலின் ஞானம் வாயிலாக மோட்சம் அடையப் பெறுதாகலின்,ஞானம் அவாந்தர பிரயோஜனமாம்.

*பிரம்ம ஞானியின் பெருமையைக் கூறல்* **(விஷயம்)**

புணர்ந்த பாவ மெலாம்பரி பூரணம்
உணர்ந்த ஞானி விழிபட ஒடுமே (2)

**பதவுரை:** புணர்ந்த பாவம் எலாம் = சஞ்சித கர்மத்தின் பலனால் வரும் பாவங்கள் அனைத்தும்; பரிபூரணம் உணர்ந்த ஞானி விழிபட ஓடுமே = பிரம்ம ஞானியின் பார்வை பட்டவுடனேயே நசித்துப் போகும்.

**பொழிப்புரை:** சஞ்சித கர்மத்தின் பலனால் வரும் பாவங்கள் அனைத்தும் , பிரம்ம ஞானியின் பார்வை பட்டவுடனேயே நசித்துப் போகும்.

**விளக்கம்: புணர்ந்த பாவம்** என்றது: புண்ணிய கர்மங்களால் தேவர்களாகவும், பாவ கர்மங்களால் விலங்கு,தாவர சங்கமங்களாகவும், புண்ணிய பாவங்கள் கலந்த மிசிர கர்மங்களால் மாநுட பிறவிகளாகவும் சீவர்களுக்கு ஈஸ்வரனால் கொடுக்கப்படுகிறது என்று சாத்திரங்கள் கூறுகின்றன. கர்மத்தைச் செய்பவர்கள் சீவர்கள்; அக்கர்மத்திற்குரிய பலனைக் கொடுப்பது ஈஸ்வரன்.

சீவர்கள் தத்தம் பிறவிகளில் உடலாலும் மனத்தாலும் செய்யப்படுகின்ற நல்வினை, தீவினைகளே புண்ணிய பாவங்களாகி ,பிராரத்த வினைகளாக நிகழ்காலத்திலும், ஆகாமிய வினைகளாக வருகிற எதிர்காலத்திலும் அநுபவிக்கப்படுகின்றது. அதிகமாய்ச் செய்யப்படுகின்ற தீவினைகளுக்குத் தகுந்தாற் போல் அடையப்படும் பாவ கர்மத்தினால் துன்பமான வாழ்வினையும்,அதேபோல் நல்வினையானது புண்ணிய கர்மத்தைக் கொடுத்து வளமான வாழ்வினைக் கொடுக்கும் என்பதாம் .

பாவங்கள் நிஷ்காம கர்மத்தினால் நீங்கும் என்று சாத்திரங்கள் சொல்லுகின்றன. **ஞானி விழிபட பாவங்கள் நசிக்கும்** என்று ஞானியின் மகிமையைக் கூறுவது இந்நூலின் **விஷயமாம்.**

*பிரம்மஞானியின் பார்வையால் பாவங்கள் நீங்கி முத்தி அடைந்தவன் சரித்திரம் ஒன்று கூறுகிறேன் எனல்* **(மாணாக்கன்)**

எழிலாரு ஞானி புகழென்னை கூற உயர்வீடு இவன்சொல் வழிசெய்
தொழிலாள ராகை அதுகேளு முன்னை இதிகாச மொன்று சொலவே. (3)

**பதவுரை:** எழிலாரும் ஞானி புகழ் என்னை கூற = தோற்றப் பொலிவுடைய பிரம்ம ஞானியின் கீர்த்தியைச் சொல்ல வார்த்தைகள் ஏது; உயர் வீடு இவன் சொல் வழி செய் = மேன்மை பொருந்திய மோட்சத்தைப் பெற பிரம்ம ஞானியின் உபதேசம் பெற்று அவர் சொல்லிய வழியிலே நடக்கின்ற; தொழிலாளர் ஆகை அது கேளு = ஞானிக்குப் பணிவிடை செய்து பலனடைந்த ஒரு சீடனின்; முன்னை இதிகாசம் ஒன்று சொலவே = பூர்வ சரித்திரம் ஒன்றைச் சொல்லுகின்றேன்.

**பொழிப்புரை:** தோற்றப் பொலிவுடைய பிரம்ம ஞானியின் கீர்த்தியை சொல்ல வார்த்தைகள் ஏது ! மேன்மை பொருந்திய மோட்சத்தைப் பெற பிரம்ம ஞானியின் உபதேசம் பெற்று, அவர் சொல்லிய வழியிலே நடக்கின்றவனாயும், ஞானிக்குப் பணிவிடை செய்து பலனடைந்தவனாயுமுள்ள ஒரு சீடனின், பூர்வ சரித்திரம் ஒன்றைச் சொல்லுகின்றேன்.

**விளக்கம்: தொழிலாளர் ஆகை அது கேளு** என்பது:

பதினென்புராணங்களில் ஒன்றான ஸ்காந்த புராணத்தில் உள்ள ஆறு சங்கிதைகளில் சூத சங்கிதையும் ஒன்று . நான்கு கண்டங்களாக பிரிக்கப்பட்ட இதில், மூன்றாவது பிரிவான முத்தி கண்டத்திலுள்ள **ஞானியின் பணி** விடைக்குப் பலனுரைக்கும் ஏழாவது அத்தியாயத்தில், சசிவர்ணன் தனது குருவான மானந்திபராயணருக்குத் தொழிலாளராக பணிவிடை செய்து பலனடைந்தான். இதனைக் கருத்தில் கொண்டே தத்துவராய சுவாமிகளும் தொழிலாளர் ஆகை, அது கேளு என்று கூறினார். எனவே முமூட்சுக்களின் பயன் கருதி சூத **சங்கிதையின்** (சம்ஹிதையின்) **முத்தி கண்டம்** ஞானியின் பணிவிடைக்குப் பலன் உரைக்கும் ஏழாம் அத்தியாயத்தில் உள்ள சசிவன்னனது சரித்திரம் பொருத்தமான இடங்களில் கொடுக்கப்பட்டுள்ளது.)

மாயவனே ஞானிகள்தம் சேவையாலே மருவும்
பயன்தனை இந்தஓத்தில் சொல்வாம்
நீ இதனைச் சிரத்தையுடன் கேளாய் .......... **(1)**

(விஷ்ணுவே ! ஒருவன் ஞானிக்கு செய்யும் பணிவிடைகளால் விளைகின்ற பலன்களை இந்த அத்தியாயத்தில் கூறுகிறேன். இதனை நீ சிரத்தையுடன் கேட்பாயாக என்று மகாதேவன் விஷ்ணுவிற்குக் கூற ஆரம்பிக்கிறார்.)

விவேகம், வைராக்கியம், சமாதிஷட்க சம்பத்தி, முமூட்சுத்துவம் என்னும் நான்கு சாதனங்களை கைவரப் பெற்றவனே குருவை அடையத் தகுதி உடைய மாணாக்கனாவான். சாதனமின்றி **ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை ஆதலால் இந்த நான்கும் அடைந்தவர்க்கு அறிவுண்டாகும்**- என்பது கைவல்யம்.



**மாணாக்கனது லக்ஷணம்-விசார சாகரம்** கூறுவது:

விஷயத்திலுள்ள சுகம் அநித்தியமாதலால் அது துக்கரூபமாம். சரீரம் உள்ள வரை துக்கம் நீங்குவதில்லை. புண்ணிய பாவங்களால் வந்த இந்த சரீரத்தில் பாவத்தின் பலனாக துக்கத்தை சீவர்கள் அனுபவித்தேயாக வேண்டும். இச்சரீரம் எடுப்பதிலிருந்து விடுதலை பெற புண்ணிய பாவங்கள் நிவிர்த்தியாக வேண்டும். புண்ணிய பாவங்கள் நிவிர்த்தியாக வேண்டின், ராக துவேஷங்கள் ஒழிய வேண்டும். ராக துவேஷங்கள் ஒழிய அநுகூல, பிரதிகூல ஞானங்கள் இருக்கக்கூடாது. அநுகூல, பிரதிகூல ஞானங்கள் பேத ஞானத்தினால் உண்டாகின்றன. பேத ஞானம் அவித்தையினால் உண்டாகிறது. ஏனெனில், **சகலப் பிரபஞ்சமும் அதன் ஞானமும் சொரூபத்தை அறியாத காலத்தில் இருக்கின்றன** என்று எல்லா வேத சாத்திரங்களும் கூறுகின்றன. ஆகவே அனைத்துத் துக்கங்களுக்கும் காரணம் சொரூபத்தின் அஞ்ஞானமாம். சொரூபத்தின் ஞானமே சொரூபத்தின் அஞ்ஞானத்தை நிவிர்த்தி செய்யும். சொரூபத்தை அறிவதால் மட்டுமே, நித்தியமாயும், ஆனந்த சொரூபமாயும் உள்ள பிரம்ம நிலையை அடைய முடியும். இப்படி எவனுக்கு விவேகம் உண்டாகிறதோ அவனே **ஜிஞ்ஞாசு (மாணாக்கன்)** எனப்படுகிறான்

முற்பிறவிகளில் செய்யப்பட்ட புண்ணியத்தால், இப்பிறவியில் அடையப் பெற்ற தனம், நிலம் முதலான அனைத்தையும் தான தர்மமாய், ஈசுரார்ப்பணம் செய்திட்டால் சுத்த வாசனையை பெற்று, இச்சாதனங்களை அடையப்பெறலாம். அப்படியின்றி ஞானிக்கு பணிவிடைசெய்வதன் மூலமாகவும் இந்நான்கு சாதனங்களை அடையப் பெறலாம் என்று இந்நூல் **மாணாக்கனது** பக்குவத்தை இப்பாடலில் கூறுகிறது.

**இந்த சரித்திரம் பரமேஸ்வரனால் விஷ்ணுவிற்கு**
**கூறியதாம் எனல் (சம்பந்தம்)**

தந்தாப முற்ற பரனேவல் செய்த
அவனுற்ற பேறு தனைமுன்
செந்தா மரைக்கண் முதல்வற்கெம் அண்ண(ல்)
திருவாய் மலர்ந்த திதுவே (4)

**பதவுரை:** தந்தாபமுற்ற பரன் ஏவல் செய்த அவனுற்ற பேறு தனை = துன்பத்தை அடைந்த புருடன் குருபரனுக்கு சேவை செய்து, குரு உபதேசம் பெற்று, முத்தி அடைந்த பாக்கியத்தை ; முன் = முற்காலத்தே ; செந்தாமரைக் கண் முதல்வற்கு = செந்தாமரை போன்ற கண்களையுடைய விஷ்ணுவிற்கு; எம் அண்ணல் = எமது பரமேஸ்வரன் ; திருவாய் மலர்ந்தது இதுவே = தனது திருவாயால் சொல்லப்பட்டது இந்த சரித்திரம்.

**பொழிப்புரை :** துன்பத்தை அடைந்த புருடன் குருபரனுக்கு சேவை செய்து, குரு உபதேசம் பெற்று, முத்தி அடைந்த பாக்கியத்தை, முற்காலத்தே செந்தாமரை போன்ற கண்களையுடைய விஷ்ணுவிற்கு எமது பரமேஸ்வரன் தனது திருவாயால் சொல்லப்பட்டது இந்த சரித்திரம்.

**விளக்கம்: தந்தாபம் (தும் +தாபம்)** என்பது: ரோகம், பசி , தாகம் முதலியவற்றால் உண்டாகும் துக்கம் அத்யாத்ம தாபம் என்றும், திருடர், பாம்பு முதலியவற்றால் உண்டாகும் துக்கம் அதி பூத தாபம் என்றும், யட்சர்கள், பிரேதங்கள், சீத வாத பித்த (குளிர், காற்று, வெயில்) முதலியவற்றால் உண்டாகும் துக்கம் அதி தைவ தாபம் என்றும் சொல்லப்படும்.

**செந்தாமரைக்கண் முதல்வற்கு எம் அண்ணல் திருவாய் மலர்ந்தது இதுவே என்பது : சூத சங்கிதையின் முத்தி கண்டம்** இரண்டாவது அத்தியாயத்தில் நைமிசாரண்ய முனிவர்களுக்கு சூத மாமுனிவர் சொல்வது:

தரணியனாய்ச் சங்குகதைசக்கராதி தரித்தானோய்
ஆபரணம்அனைத்தும் பூண்டு
திருமிகு பீதாம்பரமே உடுத்தி ஓங்கித்தேவர்
முதல் எவராலும் போற்றப்பட்ட
அரி முனமோர் கால் உலகர்க்கு இதமே
வேண்டி, அதிசயமார் கைலாசவரையிற் சென்றான் .

(முன்னம் ஒரு சமயம் விஷ்ணுவானவர் உலக மக்களின் நன்மை பொருட்டு பரமசிவனிடம் முத்திநிலை பற்றி உபதேசம் பெற வேண்டி கைலாயம் சென்றார்.)

பரவிய அவ்வடிவுற்ற பகவனான பரமசிவன்
அரியிடை நற்கருணை கூர்ந்து
திரதவமே இயற்றிடும் அவ்வரியை
நோக்கித் திரமதுர வாக்கினாலே
அரிய தவம் வெகுகாலம் புரிந்தவாற்றால்
அறவு(ம்)மகிழ்வடைந்தோம் யாம் ஆதலாலே
மருவு தவப் பயனேதோ அதனைக் கேட்பாய்
மாதவனே! என்றருளால் பகரலுற்றான்.

(பரமசிவனும் விஷ்ணு மேல் கருணை கூர்ந்து, தவம் புரிந்திடும் அரியை நோக்கி, இத்தவத்தால் தான் மிகவும் மகிழ்வுற்றதனால், தவம் இயற்றியதன் பயனை அளிப்பதாகக் கூறினார்.)



துன்பத்தை அடைந்த புருடன் குருபரனுக்கு சேவை செய்து, குரு உபதேசம் பெற்று, முத்தி அடைந்த பாக்கியத்தை சொல்வது இந்த நூல். சொல்லப்படும் விஷயம் சீவ பிரம்ம ஐக்கியம். இதுவே நூலிற்கும் விஷயத்திற்கும் உள்ள **சம்பந்தமாகும்.**

### அவதாரிகை

இந்நூலில் மாணாக்கனாக சசிவன்னன் என்ற பெயருடையோன், அவனது துர்நடத்தையினால் தீராநோயுற்று தந்தையினது முயற்சியாலும், ஒரு ஆப்தனது அறிவுரையாலும்,சத்தீஸ்வரம் என்ற திருத்தலத்தில் இருக்கின்ற மானந்திபராயணன் எனும் திருநாமம் பூண்ட ஞானியின் பார்வையில் பட,சசிவன்னன் நோயின் துன்பத்திலிருந்து பூரண நலமடைந்தது மட்டுமின்றி,ஞானிக்குப் பணிவிடைகள் புரிந்ததன் பலனால், உத்தம மாணாக்கனுக்குரிய நான்கு சாதனங்களும் கைவரப் பெற்றான். அவனுக்கு சீவபிரம்ம ஐக்கியத்தைக் கூறும் தத்துவ ஞானத்தை குருநாதர் போதிக்கத் தொடங்குதலை **5 - முதல் 20 - வது** பாடல் வரை சொல்லுகிறார்.

*சசிவன்னன் முத்தி அடைந்த கதையை கூற ஆரம்பித்தல்*

உவமிப்பின் ஞானி விழிபட்டு
முன்னை வினைவிட்டு முத்தி உலகிற்
தவமற்ற வெய்ய வினையே புரிந்த
சசிவன்ன னெய்து கதையே. (5)

**பதவுரை:** உவமிப்பின் ஞானி விழிபட்டு = ஒப்புமையற்ற பிரம்ம ஞானியின் கண் பார்வை பட்டவுடன்; முன்னை வினை விட்டு = (பஞ்சினை தீயானது நொடியில் எரித்து சாம்பலாக்குவது போல)சஞ்சித கர்மவினைகள் அனைத்தும் ஒழிய ; முத்தி = பரமானந்த ப்ராப்தி என்னும் மோட்ச வீடுற்ற; உலகில் தவமற்ற வெய்ய வினையே புரிந்த சசிவன்னன் எய்து கதையே = இப்பூமியின் கண், குற்றங்கள் பொருந்திய கொடுஞ் செயல்களிலேயே ஈடுபட்ட சசிவன்னன் என்பவனின் சரித்திரமே.

**பொழிப்புரை:** இப்பூமியின் கண் ,பிரம்ம ஞானியின் கண் பார்வை பட்டவுடன் (பஞ்சினை தீயானது நொடியில் எரித்து சாம்பலாக்குவது போல) சஞ்சித கர்மவினைகள் அனைத்தும் ஒழிந்து, பரமானந்த ப்ராப்தி என்னும் மோட்ச வீடுற்றவனும், குற்றங்கள் பொருந்திய கொடுஞ் செயல்களிலேயே முன்னர் ஈடுபட்டவனுமான சசிவன்னன் என்பவனின் சரித்திரமேயாம்.

முன்ன நீங்கியவோர் காலத்திற் பாகயஞ்ஞன்
சேயவனாய்ச் சசிவர்ணப் பெயர்பெற்றோனாய்ச்
செவ்விதிலாப் பாவமெலாம் செய்கின்றோனாய்த்

தூய நடை யற்றோனாய்த் துகளுற்றோனாய்த்
தூர்த்த சிகாமணியாய் ஓர் மறையோன் நின்றான். (1)

(முன்னொரு காலத்தில் பாகயஞ்ஞன் என்பவனின் புத்திரனாய், சசிவர்ணன் என்ற நாமமுடையோனாய், நேர்மையற்றவனாய், பாவங்க -ளையே புரிந்தவனாய், தூய நடத்தை இல்லாதவனாய், குற்றங்கள் பல புரிந்தவனாய், தீய நெறியுடைய சிகாமணியாய் ஒரு அந்தணன் இருந்தான்.)

பன்னும் அவன் தமம் மூடும் சித்தனானோன்
பரஞானந் தூஷிப்போன் வேத நிந்தை
தன்னையுமே செய்கின்றோன் ஆர்க்கும் என்றுந்
தளர்வு தரு வாதனையே செய்யா நின்றோன் .
என்னையுமே எப்பொழுதம் இகழா நின்றோன்
என்றும் எலாத் தேவரையும் தூஷிக்கின்றோன்
பின்னும் அவன் தருமம் எலாம் நிந்திக்கின்றோன்
பெரியோருக்கு அபராதம் செய்யா நின்றோன். (2)

(இதன் பொருள்: தமோ குணத்தினால் மூடப்பட்டு அசுர சம்பத்துக்களை அடையப்பெற்றவனாம். பிரம்ம ஞானத்தை நிந்தித்தல், வேதங்களை இகழ்தல், எல்லோர்க்கும் சோர்வு தரும் அளவுக்கு துன்புறுத்தல், சதா சர்வ காலமும் மகாதேவனாகிய என்னையும், மற்றுமுள்ள தேவர்களையும், தரும மிகு தெய்வசம்பத்துக்களையும் நிந்திப்பதும், அறிஞர் பெரு மக்களைத் தண்டிப்பதும் போன்ற கொடுஞ் செயல்களைப் புரிபவனாம்.)

வன்னவற மாச்சிரம அறங்கள் யாவும்
வரையறவே இகழ்ந்தோன் தன் சக்தி மட்டும்
அன்னை பிதாவுடன் பிறந்தோர் முதலோர்க்கெல்லாம்
அகிதத்தைச் செய்கின்றோன் ஆவைக் கொன்றோன்
பின்னும் அவன் செய்நன்றி மறவா நின்றோன்
பெரிதும் அவன் நாஸ்திகனாய்க் கருவஞ் செய்வோன்
அன்னியரின் தாரம் முதல் அபகரிப்போன்
அகம் முதலில் தீயிடுவோன் விடங்கொடுப்போன். (3)

(இதன் பொருள்: வர்ணாசிரமங்களை தூஷிப்பவன், தாய், தந்தை, உடன் பிறந்தோர், சுற்றத்தார் முதலானோர்க்கெல்லாம் தீமையையும், இடையூறுகளையும் விளைவிப்பவன். பசுக்களை கொலை செய்பவன், நன்றி மறப்பவன், தூல தேகமே ஆத்மா எனும் விரோசன சித்தாந்தத்தையுடைய நாத்திகன், கருவமுடையவன், பிறன் மனைவியை கவருபவன், வீடுகளை தீயிட்டு எரிப்பவன், விஷம் கொடுப்பவன்.)



மருவியவச் சசிவர்ணன் நீசப்பெண்ணின்
மகிணனுமாய் மது மாம்சாமாதி உண்போன்
வெருளற மாதீரமுடன் மாபாவங்கள் விளைத்திடுவோன் (4)

(இச்சசிவன்னன் நாய்க்கறி உண்ணும் சண்டாளப் பெண்ணின் கணவனுமாய், மது, மாமிசங்கள் உண்போனாய், பயமின்றி தீரமுடன் பெரும் பாவங்கள் புரிபவனாயும் வாழ்ந்து வந்தான்.)

சசிவன்னன் என்ற இவனது பெயரை உச்சரிப்பவருக்கே
நரகம் என்றபடி வாழ்ந்தவன் எனல்

ஏமம் புகல்வா ருளர்பா தகராம்
யாவர்க்குளு மிக்கவ னாகுமிவன்
நாமம் புகல்வார் குலமும் எரிவாய்
நரகம்புகு மாறு நடந்தனனே. (6)

**பதவுரை :-** ஏமம் புகல்வார் உளர் பாதகராம் = (உலக வாழ்க்கையில் சுகத்தைக் கொடுக்கின்ற விஷயங்களே) இன்பத்தின் உறைவிடமாகக் கொண்டுள்ளோர் இருக்கின்றார்கள். (அவர்கள்) பெரும் பாவிகளாம்; யாவர்க்குளும் மிக்கவனாகும் = இப்பெரும் பாவிகள் யாவரினும் (இவன்) மிகக் கொடியவனாம்; இவன் நாமம் புகல்வார் குலமும் = (சசிவன்னன் என்கின்ற) இவனது பெயரை (நாவால்) உச்சரிப்பவர் வம்சமே ; எரிவாய் நரகம் புகுமாறு நடந்தனனே = நெருப்பு சூழ்ந்த நரகத்தை அடையும்படி நடந்தனனே.

**பொழிப்புரை :** உலக வாழ்க்கையில் சுகத்தைக் கொடுக்கின்ற விஷயங்களே இன்பத்தின் உறைவிடமாகக் கொண்டுள்ளோர் இருக்கின்றார்கள். அவர்கள் பெரிய பாவிகளாம் .இப்பாவிகள் யாவரினும் இவன் மிகக் கொடியவனாம். சசிவன்னன் என்கின்ற இவனது பெயரை நாவால் உச்சரிப்பவர் வம்சமே , நெருப்பு சூழ்ந்த நரகத்தை அடையும்படி நடந்தனனே.

**விளக்கம்: ஏமம் புகல்வார்** என்பது: ஏமம் =சுகம், இன்பம் என்றும், புகல்வார் = விரும்புவார் என்றும் பொருள்படும். எனவே சுகத்தை விரும்புபவர் என்பதாம்.

ஆத்ம சொரூபத்தை அறியாதவனுக்கு பொன், நிலம், மாதர், புத்திராதிகள் முதலான விஷயத்தில் விருப்பம் உண்டாகிறது. இதனால் புத்தி சஞ்சலமாய் இருக்கும். விரும்பிய விஷயம் கிடைத்தவுடன் க்ஷண மாத்திரம் புத்தி ஸ்திரப்பட்டு, அதன் விருத்தி உள்முகமாகிறது. அந்த உள்முக விருத்தியில் ஆத்மாவின் சொரூபானந்தம் பிரதிபிம்பிக்கிறது. இந்த பிரதிபிம்பத்தை அனுபவிக்கின்றவனுக்கு விஷயத்தால் ஆனந்தமாம் என்ற மயக்கம் உண்டாகிறது. ஆனால் விஷயத்தில் ஆனந்தமில்லை. - **விசார சாகரம்.**

போகத்தில் வரு சுகம் விடய சுகம் ..... என்றும், ஈனந் தரு சுக(ம்) விடயம் திரிபுடி இடராம்... (விஷயானந்தம் புசிப்பவன், போகம், போக்கியம் என்னும் திரிபுடியோடு கூடியிருத்தலின் துன்ப வடிவமாம்) என்றும் **கைவல்யம்** கூறுகின்றது.

நாங்கூர் வேதாந்த கேசரி **ஸ்ரீமத் வாசுதேவானந்தா சுவாமி**களால் ஆக்கப்பட்ட கைவல்ய நவநீத சாரம் அல்லது எனது நிஜ சொரூபம் முதல்பாகத்தின் முன்பக்க அட்டையில் விஷயானந்தம் என்ற தலைப்பிட்டு பின்வருமாறு கூறப்பட்டுள்ளதும் நோக்கத்தக்கது.

தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்திற்கு உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியர் இயற்றியருளிய உரையில், "ஒத்த அன்பான் ஒருத்தனும், ஒருத்தியும் கூடுகின்ற காலத்து பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்கு புலனாக இவ்வாறிருந்ததென கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்புறுவதோர்ப் பொருளாதலின் அதனை அகம்(நான்)என்றார். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகம் என்றது ஆகு பெயராம்" என்று கூறியிருப்பதால் ஆத்மாவின் சொரூபானந்தமே விஷயானந்தமாய் தோன்றுகின்றதே ஒழிய, விஷயத்தில் ஆனந்தமில்லை என்பது தமிழ் மறையின் திரண்ட பொருளாம்.

ஆகவே விஷயானந்தத்தை மிகவும் இச்சிப்போர் பெரும் பாவிகள் என்றார், இவனது பெயரை உச்சரிப்பவன் வம்சமே நரகத்தை அடையும் என மிகை படக் கூறியது, சசிவன்னனால் புரியப்பட்ட தீய செயல்கள் அளவிடற்கரியது என்பதனால் என்க.

***இவனது நடத்தையால் பிதிரர்கள் நரகத்தில் குடியேறினர் எனல்***

மலமேவிய தீவினை யின்வலியால்
மகிழும்பர் பதத்தி லிருந்தஇவன்
குலமேவிய தென்புல வாணர்களும்
கொடிதாநர கங்குடி யேறினரே. (7)

**பதவுரை:** மல மேவிய தீவினை யின் வலியால் = பாவ பலன்களை கொடுக்கின்ற தீய தொழில்களையே இவன் புரிந்ததன் வலிமையால் : மகிழ் உம்பர் பதத்திலிருந்த = சுகம் ஒன்றினை மட்டுமே கொண்டிருக்கின்ற சொர்க்க லோகத்தில் வாழ்ந்த; இவன் குலமேவிய தென்புலவாணர்களும் = இவனது குடியைச் சார்ந்த பிதிரர்களும் (மூதாதையர்களும்); கொடிதா(ம்) நரகங் குடியேறினரே =எப்பொழுதும் துன்பத்தையே கொடுக்கிற நரகத்தில் (சுகத்தைக் கொடுக்கின்ற சொர்க்க லோகத்தை விட்டு நீங்கி ) குடி புகுந்தனர்.



**பொழிப்புரை:** பாவ பலன்களை கொடுக்கின்ற தீய தொழில்களையே இவன் புரிந்த காரணத்தின் வலிமையால், சுகம் ஒன்றினையே அனுபவித்துக் கொண்டு, சொர்க்க லோகத்தில் வாழ்ந்து கொண்டிருந்த இவனது குடியைச் சேர்ந்த பிதிரர்களும் (மூதாதையர்களும்) எப்பொழுதும் துன்பத்தை மட்டுமே கொடுக்கின்ற நரகத்தில் - சொர்க்கலோகத்திலிருந்து நீங்கி - குடி புகுந்தனர்.

**.....அவன் இவ்வாறு அவனியின் கண்**
**திரிதருநாள் அவனுடைய பிதிர்க்கள் எல்லாம்**
**திகழ்கின்ற சொர்க்க முதல் உலகினின்றும்**
**பரவசராய் நரகத்தில் வீழ்ந்தார் அன்னோன்**
**பாவத்தை என் சொல்வோம் பதுமநாபா. (4)**

(...சசிவன்னன் இவ்விதமாய் உலகத்தின் கண்ணே திரிந்து கொண்டிருக்கும் நாளில் அவனுடைய பிதிரர்கள் (முன்னோர்கள்)யாவரும், விளங்கும் தேவலோக முதலானவற்றிலிருந்து இவனது தீவினையின் வசத்தால் நரகத்தில் வீழ்ந்தார்கள். இப்படிப்பட்ட சசிவன்னனது பாவத்தின் வலிமையை என்னவென்று சொல்வேன் விஷ்ணுவே!)

***ஆகாமிய கர்மத்தை நிகழ்காலத்திலேயே கூட அனுபவிக்கக் கூடும் எனல்***

மிகமேவிய புண்ணிய பாவமெனும்
வினையின்பயன் மேலொரு காலமுறாது
இகமேவரும் என்பத னாலுளதோ
எல்லாம்இவ னைச்செற எய்தினவே. (8)

**பதவுரை:** மிகமேவிய புண்ணிய பாவமெனும் வினையின் பயன் = (இப்பிறவியில் செய்யப்பட்ட)மிகப்பொருந்திய நல்வினை தீவினைகளால் வரும் புண்ணிய பாவங்களின்( ஆகாமிய கர்மத்தின் ) பலனானது; மேலொரு காலமுறாது= அடுத்து வருகின்ற பிறவிகளில் அனுபவிப்பதற்கு மாறாக; இகமே வரும் என்பதனால் உளதோ = இப்பிறவியிலேயே அனுபவிக்க வேண்டும் என்றிருக்குமோ என்னும் சந்தேகம் எழும் அளவிற்கு; எல்லாம் இவனைச் செற எய்தினவே = இவனது கொடுஞ்செயல்களால் வந்த பாவ பலன்கள் அனைத்தையும் நடக்கின்ற இப்பிறவிலேயே அனுபவிக்க நேர்ந்ததே.

**பொழிப்புரை:**– இப்பிறவியில் செய்யப்பட்ட நல்வினை தீவினைகளால் (வரும் பிறவிகளுக்குரிய ஆகாமிய கர்மத்தால்) பெறப்படும் புண்ணிய பாவங்களின் பலனானது, அடுத்துவருகின்ற பிறவிகளில் அனுபவிப்பதற்கு மாறாக, இப்பிறவியிலேயே அனுபவிக்க வேண்டும் என்றிருக்குமோ என்னும் சந்தேகம் எழும் அளவிற்கு இவனது கொடுஞ்செயல்களால் வந்த பாவ பலன்கள் அனைத்தையும் நடக்கின்ற இப்பிறவிலேயே அனுபவிக்க நேர்ந்ததே.

இன்னவிதஞ் சிலகாலஞ் சென்ற பின்னர்
இன்னவன் வெம்பிணிகளினால் பீடையுற்றுப்
பின்னருமே வெகுவிதமாம் பசாசினாலும்
பிடிப்புற்று மகத்தான துயரஞ் சார்ந்தான்.... (5)

(இப்படிப்பட்ட தீய நெறியையே அவன் கடைப்பிடித்து ஒழுகி,சிற்காலம் கடந்த பின், இத்தன்மையுடைத்தான சசிவன்னன் கொடுமையான வியாதிகளால் பீடிக்கப்பட்டும், பேய்களினால் பிடிப்புற்றும் வெகுவிதமாய் துன்பங்களை அனுபவிக்கலானான்...)

**விளக்கம்: புண்ணிய பாவமெனும் வினையின் பயன்.** என்பது: ......... **பல சன்ம விவித வித்தாம், சஞ்சிதம் எல்லாம்.........கைவல்யம்.** அதாவது........பற்பல பிறவிகளில் செய்யப்பட்ட கர்மங்கள் அனைத்தையும் விதைகளாகவே வைத்திருக்கின்ற சஞ்சித கர்மங்கள் எல்லாம்..... என்பது. (கடந்த கால பிறவிகளில் செய்யப்பட்டு இன்னும் பலனுக்கு வராமல் உள்ள கர்மங்கள் சஞ்சிதமாம்.)

**மேலொரு காலமுறாது இகமே வரும் என்பதனால் உளதோ** என்பது: ஒவ்வொரு பிறவியிலும் செய்யப்படுகின்ற நல்வினை,தீவினைக்கு ஒப்ப வருகின்ற புண்ணிய பாவங்கள் அடுத்து வருகின்ற பிறவிகளில் இச்சீவர்கள் அனுபவித்தேயாக வேண்டும் என வேத உபநிஷத்துக்கள் கூறுகின்றன. இப்படியிருக்க,இப்பாடலில் இகமே வரும் என்பதனால் உ ளதோ என்று கூறுவதால் ஏனைய பிற லௌகீகவாதிகள் கூறுவது போன்று இருக்குமோ என்று ஆச்சரியப்படுவது போல் காண்பிப்பதேயன்றி வேறில்லை.

சசிவன்னன் ஆற்றிய கொடுமைகள் உலகில் எவரும் சகிக்கமுடியாத அளவிற்கு இருந்ததால்,பஞ்சகிருத்தியங்களைச் செய்கின்ற ஈஸ்வரன், **குலவுமக்களைத் தந்தை போல் சிட்டரைக் குளிர்ந்து துட்டரைக் காய்வன், கலைகள் நல்வழி வரச்செயும் தண்டமும் கருணை என்றறிவாயே** (தந்தை தனது புத்திரர்களில் நற்குணத்தோனைப் பாராட்டி, துர்க்குணமுடையோனைத் தண்டிப்பான். அவனை நல்வழிப் படுத்துவதற்கான தண்டனையும் தன் புத்திரன் மேலுள்ள கருணையால் என்றே அறிவாய்.) எனும் கைவல்யக் கூற்றுக் கொப்ப, அவனுக்குத் தீராத கொடிய நோயை கருணை நிமித்தமாய் தண்டனையாகக் கொடுத்தார் என லட்சணாவிருத்தியால் பொருள் கொள்ள வேண்டும். ஏனெனில் இப்பிறவியிலேயே பிரம்ம ஞானியாக,சீவன் முத்தி நிலை அடைந்து, விதேக கைவல்யம் அடைய வேண்டிய பிராரத்தம் சசிவன்னனுக்கு இருந்ததினால், எஞ்சிய சஞ்சிதத்தின் பாவ கர்மங்களை அனுபவித்துத் தீர்க்க வேண்டியதால்,



தீராத நோய்க்கு ஆட்படுத்தப்பட்டான் என்பதேயாம். **அருணகிரிநாதர், வேமண்ணா** முதலான ஞானிகளின் பூர்வ சரித்திரம் யாவரும் அறிந்ததே.

**கருத்து : அதிக துன்பங்களை அனுபவிக்க வேண்டியுள்ளதே என வேதாந்தம் கற்கும் மாணாக்கர்கள் மனம் கலங்க வேண்டியதில்லை.** முற்பிறவிகளில் செய்யப்பட்ட பாவங்கள் கழிய வேண்டுமானால் பிராரத்த வினையை அனுபவித்தே தீர்க்க வேண்டும் என்பது பரமேஸ்வரனது ஆக்ஞை என்று உணர வேண்டும். குரு தரிசனமும் கிடைக்கும்.மோட்சமும் நிச்சயமே.

**தனயனது துன்பம் கண்டு தந்தை கலங்குதலைக் கூறல்**

தன்புத்திர நேயம் விடாமையினால்
தவறுற்ற இவற்பெறு தந்தையுளம்
துன்புற்றுஇனி என்னை கொலோபுதல்வன்
துயர்தீர்வகை என்று சுழன்றனனே. (9)

**பதவுரை:** தன் புத்திர நேயம் விடாமையினால் = தனது மகன் மீதுள்ள பாசத்தினை விட முடியாதவனாய்; தவறுற்ற இவற்பெறு தந்தையுளம் துன்புற்று = தவறிழைத்தேனோ இவனைப் பெற்றதனால் என்று இவனது தந்தை துன்பத்தினை அடைந்து; இனி என்னை கொலோ = (இந்நிலையில் இருக்கின்ற இவனை) இனி என்ன செய்வது; புதல்வன் துயர் தீர்வகை என்று சுழன்றனனே = மைந்தனது துன்பத்தை நிவர்த்திக்க ஏதேனும் வழியுண்டா என்று கலங்கினான்.

**பொழிப்புரை:** தனது மகன் மீதுள்ள பாசத்தினை விட முடியாதவனாய், இவனைப் பெற்றதனால் தவறிழைத்தேனோ என்று, இவனது தந்தை துன்பத்தினை அடைந்து இந்நிலையில் இருக்கின்ற இவனை இனி என்ன செய்வது? மைந்தனது துன்பத்தை நிவர்த்திக்க ஏதேனும் வழியுண்டா என்று கலங்கினான்.

அன்னவன் அத்துயரையெல்லாம் அன்று நோக்கி
அவனுடை பிதாவான பாகயஞ்ஞன்
இன்னல் மிகுந்து இரக்கமுடன் மிக வ(ஃ)ழுங்கி
இனிய உயிர் போனவன் போல் புவியில் வீழ்ந்தான். (5)

(தீராத அவ்வியாதியினால் சசிவன்னன் படும் துன்பத்தைக் கண்டு அவனது தந்தையான பாகயஞ்ஞன் சோகத்தை மிகவும் அடைந்து, மைந்தன் மேல் உள்ள கருணையால் மிகவும் அஞ்சி,தனது உயிர் போனது போல தரையில் வீழ்ந்தான்.)

**விளக்கம்: தாகப்படும் பொருளினும் மகன் பிரியமாம்** என்றவாறு நற்குணங்களையுடைய தந்தை, தன் மைந்தன் மேல் வைத்த அளவற்ற பாசத்தினால் முற்பிறவியில் தான் என்ன பாவம் செய்தேனோ என்று மனம் கலங்கி, கொடும் வினைகளை செய்ததன் காரணத்தால் தீராத நோயுற்ற கொடியவனான இந்த சசிவன்னனைப் பெற்ற தவற்றினை இழைத்து விட்டாலும். **கெடலான பொழுது இவன் காணிக்கு மகனான கவுணான்மா முக்கியம்** என்று கைவல்யம் கூறுவதற்கொப்ப கௌணாத்மாவான தனது புத்திரனைக் காப்பாற்றும் வழி ஏதேனும் உண்டா என ஆலோசித்தான் என்பதாம்.

மகன் பிறக்காமையால் மாதா பிதாக்களுக்குத் துன்பம். பிரசவத்தால் தாய்க்குத் துன்பம். புத்திரன் பிறக்க அவனை வியாதி முதலியவையும், குமார பருவத்தில் மூர்க்கத்தன்மையும், கல்வி கற்காதவனாயும், படித்தவனானாலும் விவாகம் ஆகாமையினாலும் பெற்றவர்க்கு துன்பம். புத்திரன் வறுமை அடைதல், பெற்றவர்க்கு துன்பம் கொடுக்கும் செல்வந்தனாக இருந்து இறப்பானேல் தாய் தந்தை அடையும் துன்பத்திற்கு அளவே இல்லையாம்.

**– ஸ்ரீபஞ்சதசி – ஆத்மானந்தம்**

*தனயனது நோய் தீர பரிகாரம் தேடி தகப்பன் யாத்திரை செய்தல்*

ஒன்றாலும் வினைத்துயர் துய்ப்பதலால்
ஒழிவிக்கும் உபாயம் உனற்கிலதே
என்றாலும் அறிந்திவன் அன்புவிடாது
இவனைக்கொ டுழன்றனன் எங்ஙனுமே. (10)

**பதவுரை:** வினைத் துயர் துய்ப்பதலால் = சஞ்சித வினையினால் வரும் கர்ம பலன்களை அவரவர்களே புசிக்கவேண்டுமே அல்லாமல்; ஒன்றாலும் ஒழிவிக்கும் உபாயம் உனற்கிலதே என்றாலும் = வேறு எவ்வகையாலும் இத்துன்பங்கள் நீங்குவதற்கான வழிமுறைகள் தனக்கு இல்லை என்று தெரிந்திடினும்; அறிந்து = தன் மைந்தன் அனுபவிக்கின்ற துன்பத்தைப் பார்த்து; இவன் அன்பு விடாது = தந்தை தனது புத்திர பாசத்தை விடாது; இவனைக் கொடு உழன்றனன் எங்ஙனுமே = சசிவன்னனைத் தூக்கிக் கொண்டு (ஏதேனும் வழி பிறக்காதா என்று) எல்லாவிடங்களிலும் சுற்றிச் சுற்றி அலைந்தான்.

**பொழிப்புரை:** சஞ்சித வினையினால் வரும் கர்ம பலன்களை அவரவர்களே புசிக்க வேண்டுமே அல்லாமல் வேறு எவ்வகையாலும் இத்துன்பங்கள் நீங்குவதற்கான வழிமுறைகள் தனக்கு இல்லை என்று தெரிந்திருந்தாலும் தன் மைந்தன் அனுபவிக்கின்ற துன்பத்தைப் பார்த்து, தனது புத்திர பாசத்தை விட



முடியாமையால் சசிவன்னனைத் தூக்கிக் கொண்டு (ஏதேனும் வழி பிறக்காதா என்று) எல்லாவிடங்களிலும் சுற்றிச் சுற்றி அலைந்தான்.

**விளக்கம்: ஒன்றாலும் வினைத் துயர் துய்ப்பதலால் ஒழிவிக்கும் உபாயம் உனற்கிலதே என்றாலும்** என்பது :(சகல போகங்ளையும் நீக்கிய) சாந்தர்கள், (தனிமையையே விரும்பும்) ஏகாந்தர்கள், (சருவமும் சச்சிதானந்தமாய்க் கண்ட) முத்தர்கள், சித்தர்கள், பக்தர்கள், (பாசக் கட்டுடைய) பெத்தர்கள், ( பேராசையுடைய) ராகிகள், யோகிகள், (விடய சுகம் விரும்பும்) போகிகள், தியாகிகள், (பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய) மூவர்கள், (முப்பத்து முக்கோடி) தேவர்கள், சீவர்கள் முதலாய் எவராயிருப்பினும், **அனுபவிக்காது அகலாது தர்மாதர்மமாகிய பூர்வ ஜன்மாந்தரம் செய் கர்மம்** என்ற அச்சுததாச சுவாமிகளின் பாடல் கூறுவதற்கொப்ப, சசிவன்னனும் அனுபவித்தே தீர்க்க வேண்டும் என இவனது பிதாவிற்குத் தெரியுமானாலும், கௌணான்மாவான தனது புத்திர வாஞ்சையால் **அறிந்து இவன் அன்பு விடாது** என்றார்.

**ஆன பாவிகள் அடைவன நரகங்கள் அவசியமானாலும், தான மந்திர விரத ஓமங்களால் தவிரும் என்பது பொய்யோ** (பாவங்களைப் புரிந்தோர் நரகங்களை அவசியம் அடைவர். ஆனாலும் தானங்கள் செய்வது, மந்திரங்கள் ஜபிப்பது, விரதங்களைக் கடைப்பிடிப்பது, யக்ஞங்கள் செய்வது போன்றவைகளால் தவிரும் என்று கர்ம காண்டம் சொல்வது பொய்யல்லவே) என்கின்றது கைவல்யம்.

மேலும், **விசாரசாகரம்** கூறுவது : பாவத்திலிருந்து விடுபட பிராயச்சித்தம் செய்ய வேண்டும் என கர்ம காண்டத்தில் கூறப்பட்டுள்ளது. அசாதாரணம், சாதாரணம் என பிராயச்சித்தம் இரு வகையாம். நடப்புப் பிறவியில் அறிந்தோ, அறியாமலோ விலக்கப்பட்ட கர்மத்தைப் புரிந்ததனால் வரும் பாவங்களை நிவர்த்திக்க சாத்திரங்களில் கூறியவாறு செய்தல் ( ஒரு துறவி - அன்னம், வஸ்திரம் தவிர- திரவியங்களைப் பெறுவானானால் அத்துறவி பாவத்தை சம்பாதிக்கிறான் . அந்தப் பாவம் திரவியத்தைத் தியாகம் செய்தலாலும், மூன்று நாள் உபவாசம் இருத்தலாலும் நீங்கும் என்பது) **அசாதாரண பிராயச்சித்தம்** எனப்படும். முற்பிறவிகளில் செய்யப்பட்ட பாவங்கள் அறியப்படாதவைகளாகும். கங்கா ஸ்நானம், ஈஸ்வர நமோச்சரணம், காசி, ராமேஸ்வரம், கும்ப மேளா, மகாமகம் போன்ற தீர்த்தங்களில் நீராடல் போன்றவைகளால் நிவிர்த்தித்தல் **சாதாரண பிராயச்சித்தம்** எனப்படும். சசிவன்னனது பாவங்கள் அறியப்பட்டதால் அதற்குண்டான **(புணர்ந்த பாவ மெலாம் பரி பூரணம் உணர்ந்த ஞானி விழிபட ஓடுமே எனும்)** அசாதாரண பிராயச்சித்தத்தால் நோயின் துன்பத்திலிருந்து தன் புத்திரனை

மீட்க வேண்டி, பிதாவான பாகயஞ்ஞன் **இவனைக் கொடு உழன்றனன் எங்ஙனுமே** என்றார்.

*பிரம்ம ஞானி விழிபட நோய் தீரும் என ஆப்தன் கூறுதல்*

ஒருமாதவன் மற்றுஇவன் வேதனைகண்டு
ஒழிவற்றுள ஒன்றை உளத்துணரும்
பரமாகிய ஞானிகள் கண்ணுறலே
பரமஔடதம் என்று பகர்ந்தனனே. (11)

**பதவுரை:** ஒருமாதவன் மற்று இவன் வேதனை கண்டு = ஒரு ஆப்தன் சசிவன்னனின் தந்தைபடுகின்ற துன்பத்தின் காரணத்தை கேட்டு அறிந்து; ஒழிவற்றுள ஒன்றை உ(ள்)ளத்து உணரும் = நித்திய,பரிபூரணமான பரம் பொருளைத் தன்னுள்ளத்தின் கண் உணர்ந்த ; பரமாகிய ஞானிகள் கண்ணுறலே = பிரம்ம சொரூபமான சீவன் முத்தர்கள் விழிபடுதலே ; பரம ஔடதம் என்று பகர்ந்தனனே = (உனது புத்திரன் இந்த நோயிலிருந்து விடுபட) உயர்ந்த மருந்து என்று கூறினான்.

**பொழிப்புரை:** ஒரு ஆப்தன் சசிவன்னனின் தந்தைபடுகின்ற துன்பத்தின் காரணத்தை கேட்டு அறிந்து நித்திய,பரிபூரணமான பரம் பொருளைத் தன்னுள்ளத்தின் கண் உணர்ந்த பிரம்ம சொரூபமான சீவன் முத்தர்கள் விழிபடுதலே உனது புத்திரன் இந்த நோயிலிருந்து விடுபட உயர்ந்த மருந்து என்று கூறினான்.

இந்தவிதம் வெகுபேதவிதனத்தோடு
என் பக்தனாகிய பாகயஞ்ஞன்
அந்தமிலாச் சசிவர்ணன் துயரைத் தீர்க்க
யாருளரோ என்றெண்ணி இருக்கும்போதில்
பந்த முதலிய யாவையுமே அறிந்த தேவபத்தன்
எனும் ஒரு முனிவன் இவனை நோக்கிப்
புந்தியுறு மகத்தான கருணையோடும்
பொருந்தினனாய் இவ்வசனம் புகலுற்றான். **(6)**

(இவ்விதமாய் எனது (சிவனின்) பக்தனாகிய பாகயஞ்ஞன் மிகுந்த விசனத்தோடு சசிவன்னனது முடிவற்ற இத்துயரைப் போக்க எவரேனும் இருப்பரோ என்று கவலையுற்று இருந்தபோது, பந்தம் வீடு முதலிய அனைத்தையும் உணர்ந்த தேவபத்தன் எனும் ஒரு கருணையுள்ள முனிவன் இவனை நோக்கி கூறலுற்றான் )



ஏகசிவபத்தி செயும் பாகயஞ்ஞா
எழுந்திடு நீ வெருளவேண்டா
சோகமிகு முன் சேயுந் துன்பந் தீர்ந்துசுகம்
பெறவோர் உபாயத்தைச் சொல்லக்கேளாய்... **(7)**

(சிவனையே சதா சர்வ காலமும் தொழும் பாகயஞ்ஞா! அஞ்ச வேண்டாம். சோகமிகுந்த உனது தனயனது துன்பம் நீங்கி ஆனந்தமடைய ஓர் வழியைச் சொல்லக் கேளாய்.)

**விளக்கம்:** இப்பிறவியில் அனுபவிப்பது சஞ்சித கர்ம பலன்களான பிராரத்த வினைகள் என்று சாத்திரத்தில் கூறியிருக்க,இவன் அனுபவிக்க வேண்டியதான பிராரத்தத்தை நீக்க கர்ம பலன்களைக் கொடுக்கின்ற ஈஸ்வரனுக்கே அதிகாரம் இல்லையெனில்,ஞானி விழிபட ஓடும் எனல் முரணாயுள்ளதே என்றிடில், இதன் தாற்பரியம் இவ்விதமாம்.

**இப்புவியில் இஞ்ஞானபூமி ஒன்றில் இரண்டில் அடைந்திருந் -தாரானால் அப்புருடர் மிலேச்சராகிலும் முத்தர் குருபாதத்து ஆணை மெய்யே** (இவ்வுலகத்தே சுபேச்சை, விசாரணை, தனுமாநசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனை, துரியம் எனும் ஞானபூமிகளில் சுபேச்சை அல்லது விசாரணை என்கிற முதலிரண்டு பூமிகளை அடைந்தவராயிருப்பின் அவர் மிலேச்சரானாலும் முத்தனே) என்ற கைவல்யக் கூற்றுப்படி, சசிவன்னன் முற்பிறவியில் ஞானபூமி ஏழில் ஒன்றிரண்டை அடைந்திருந்ததன் பலனால்,இப்பிறவியிலேயே வீடுற, சற்குருவின் சன்னிதானத்தை அடைந்து தத்துவஞானம் பெறவேண்டி, எஞ்சிய பாவ கர்மத்தின் பலனால் கொடும் நோயினால் துன்பத்தினை அடைவதன் மூலமாக, விஞ்சிய பிராரத்தத்தின் வினையை அனுபவித்துத் தீர்த்து பிரம்ம ஞானியாக வேண்டும் என்பது இவனது சஞ்சித கர்மமாக இருக்கின்ற காரணத்தால் ஞானி விழிபட ஓடும் என்று கொள்வது முரணாகாது.

*சத்தீஸ்வரம் எனும் திருத்தலத்தில் அம்மருந்து கிடைக்கும் என ஆப்தன் கூறல்*

தானந்த மிலாத தனைத்தருவான்
சத்தீச்சர மென்னும் இடந்தனில்வாழ்
மானந்தி பராயணன் என்பவன்நின்
மைந்தற்குறு நோய்க்கு மருந்தெனவே. (12)

**பதவுரை:** தான் அந்தமிலாத = (நான் எனும் சிதாபாச சீவத்தன்மை நீங்கிய) தான் எனும் கூடஸ்தனாகிய ,ஆதி, மத்திமம், அந்தம் இல்லாத ; அதனைத்

தருவான் = சச்சிதானந்த சொரூபத்தை அவரவர் அறியும்படிச் செய்பவன்; சத்தீச்சுரம் என்னும் இடந்தனில் வாழ் மானந்திபராயணன் என்பவன் = சத்தீஸ்வரம் என்ற திருத்தலத்தில் அருள் புரிந்து கொண்டிருக்கின்ற மானந்தி பராயணன் எனும் நாமத்தை உடையவன்: நின் மைந்தற்குறு நோய்க்கு மருந்தெனவே = உனது மகனுக்குற்ற தீராத நோயை போக்குகின்ற உன்னத மருந்தாவான்.

**பொழிப்புரை:** நான் எனும் சிதாபாச சீவத்தன்மை நீக்கி, ஆதி, மத்திமம், அந்தமில்லாத, தான் எனும் கூடஸ்தனாகிய, சச்சிதானந்த சொரூபத்தை அவரவர் அறியும்படிச் செய்பவனும், சத்தீஸ்வரம் என்ற திருத்தலத்தில் அருள் புரிந்து கொண்டிருக்கின்றவனுமான மானந்தி பராயணன் என்பவனே, உனது மகனுக்குற்ற தீராத நோயை போக்குகின்ற உன்னத மருந்தாவான் என்றனன்.

மோகமிலாப் பரமசிவன் சொரூபஞ் சார
மூலமதாய்ப்பாவனமாய்ச் சீர் மிகுந்த
தாகியகோ பருவதம் என்றுரைக்கும் நாமம்
அடைந்துளவோர் சிவத்தானம் உள்ளதன்றே. (7)

(மயக்கமற்ற பரமேஸ்வரனது சொரூபத்தின் சாரமாயும், மூலமாயும், தூய்மையாயும் இருக்கின்ற பெருமை மிகும் கோ பருவதம் (கோபுராபுரம்) என்கின்ற பெயருடைய சிவத்தலம் ஒன்றுளது.)

பதினாறு குரோசம் அவை நீண்டதாகிப்
பதினாறு குரோசம் அளவு அகன்றதாகும்
அதில் ஆதி சத்தி உமையான தேவி
அப்பதி நாயகனை ஆராதித்து
முதிர்கின்ற பத்தியுடன் தனது நாமம்
முன்னிட்டுச் சத்தீசன் என்பதாயப்
பதி நின்ற ஈசர்க்கு நாமமிட்டாள்
பதியதுவும் சத்தீசம் என்னலாமே. (8)

(இத்தலம் 16 குரோசம்(60கி.மீ.) நீள அகலத்தையுடையது. ஆதி சக்தியான உமாதேவி இத்திருத்தலத்திலுள்ள சிவனை வழிபட்டு, பக்தி முதிர்ந்த நிலையில், தனது பெயரான சத்தீஸ்வரி என்ற பெயருக்கு ஒப்பவே சத்தீஸ்வரன் எனப் பெயரிட்ட காரணத்தால், அத்திருத்தலம் சத்தீஸ்வரம் என்ற பெயரை பெற்றது எனக் கூறலாம்.)

அந்தணனே அப்பதியில் அயன் முன்னோர்கால்
அவ்வீசன் தனை அன்போடு ஆராதித்துத்



தொந்த சகச் சிருட்டியெலாம் செய்யும் சத்தி
துகளில்லாச் சத்தீசன் அருளால் பெற்றான்
இந்திரனும் ஒருகால் அவ்வீசன் தன்னை
இனிமையுடன் அப்பதியில் பூசித்(து) அன்னோன்
தந்த அருள் தன்னாலே தேவர்க்கு எல்லாம்
தடையறவே நாயகனாகி நின்றாள். (9)

(மறையவனே ! அத்தலத்தில் பிரம்மா அச்சிவனை அன்புடன் வழிபட்டதால் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கின்ற சக்தியை சத்தீஸ்வரனின் அருளால் பெற்றான். இந்திரனும் இவரது அருளாலே தேவர்களுக்கெல்லாம் தலைவனானான்.)

பின்னொரு கால் சுக்கிரனும் வியாழன் தானும்
பேசிய அப்பதி தன்னில் அவ்வீசன் தன்னைப்
பன்னிய நற் காலத்தில் பூசித்து அந்தப்
பரமசிவன் கருணையினால் அசுரர் தேவர்
என்னும் இவர்க்கு ஆசிரியராய் இசைந்தார்
இப்பதியில் இவ்விதமே அனேகர் பூசித்து
அன்ன சிவன் கருணையினால் தாங்கள்
தாங்கள் ஆசித்த பயன்களையே அடைந்தாரன்றே. (10)

(பின்னுமொரு சமயம் சுக்கிரனும், பிரஹஸ்பதியும் இத்தலத்தில் பூசித்ததன் பலனாக சுக்கிரனை அசுரகுருவாகவும், பிரஹஸ்பதியை தேவ குருவாகவும் ஆக்கி அருளினார். இப்படி இத்திருத்தலத்தில் வழிபட்டு வந்தோர்களுக்கெல்லாம், இச்சத்தீஸ்வரரது கருணையினாலே, அவரவர் யாசித்த பயன்களையே பெற்றார்கள்.)

பருவமுதல் புண்ணியகாலத்தில் ஆங்கே
பத்தியுடன் பரசிவனை ஆராதித்துப்
பிரியமுடன் சிவனடியார் தமக்கு வித்தம் பேணி
மற்றைப்பொருளும் அளிப்போர் ஈசன்
அருளதால் வீடுறுவர் மற்றுமாங்கே
அவ்வீசன் தனை நோக்கிச் சிவபத்தர்க்கே
புரிவுடனே தனம் ஈந்தோர் போகம் சார்வர்
பூமிதனில் வெற்றியினைப் பொருந்தா நிற்பார். (11)

(பக்தியுடன் சிவனை வணங்கி, சிவனடியார்களுக்கு ஈசுரார்ப்பணம் (அன்னதானம், வஸ்திர தானம் முதலியன) செய்வோர், சத்தீஸ்வரரின்

அருளால் முத்தி பெறுவர். சிவ பக்தர்களுக்கு தனம் வழங்குவோர் இவ்வுலகிலுள்ள போகங்களை அடைந்து சுகத்தில் திளைப்பர்.மற்றும் சகல காரியங்களிலும் வெற்றியினையே பொருந்துவர்.)

சங்கற்ப பூருவமாய் நித்தமாங்கே
சத்தீசன் தனைக் கண்டு பிரம வித்தின்
பொங்குற்ற அத்தத்தில் எவளவேனும்
புரிவுடனே தண்டுலமே முதலளிப்போன்
மங்கற்ற வீடுறுவன் மற்றுமாங்கே
மாபாவியாகினுமே மரணமுற்றால்
அங்குற்ற சத்தீசன் அருளினாலே
அகமற்று வீடுறுவன் ஐயமில்லை. **(12)**

(எக்கணமும் சத்திஸ்வரனையே சங்கல்பத்தில் வைத்துக் கொண்டு, சீவன்முத்தர்களான பிரம்ம வித்து போன்றோர்க்கு எல்லாம் அரிசி முதலியன அளிப்போன் முத்தி பெறுவன்.மற்றும் இவ்விதம் நடப்போன் பெரும் பாவியாயினும், அவன் மரணம் அடையின் சத்தீஸ்வரனின் அருளினால் பிறவி நீங்கி வீடு பேற்றினை அடைவான் என்பதில் எள்ளளவும் சந்தேகமே இல்லை.)

பரவிய இம்மகிமையுறும் அத்தானத்தில்
பரம கிருபா சாகரனாய் வேதாந்தத்தின்
அரிய பொருள் அனைத்தையுமே அறிந்தோனான
ஆனந்த பராயணன் என்றொரு மா யோகி
திரமுறவே வசிக்கின்றான் ஆதலாலே தீவிரம்
உன் தனயனுடன் ஆங்கே சென்று அப்
பரசிவனைத் தெரிசித்த பின்னர் அந்தப்
பரயோகி தனைச் சார்தி பாகயஞ்ஞா. **(13)**

(இவ்விதமாய் பெரும் புகழுடைய இத்திருத்தலத்தில்,பரம கருணைக் கடலாய்,வேதாந்த தத்துவத்தின் உண்மைப் பொருள் அனைத்தையுமே அறிந்தவனாய், ஆனந்த பராயணன் என்னும் ஒரு மாயோகியான பிரம்மஞானி வசிக்கின்றான். ஆகையால் உடனே அத்திருத்தலத்திற்கு உனது தனயனை அழைத்துச்சென்று, சத்தீஸ்வரனை வணங்கிய பின்னர்,அந்த பிரம்ம ஞானியைச் சார்வாய் பாகயஞ்ஞா, என்றனன் ஆப்தனான தேவபத்தன்.)

உன்னுடைய தனயனுடன் அவனை நோக்கி
ஓங்கிய நற்பத்தியுடன் வணங்கிப்போற்றி
அன்னவனுக்கு அனுகூலமான சேவை



அனைத்தையும் உன் சுதனாலே செய்விப்பாயேல்
இன்னல் எல்லாம் இவன் தீர்ந்து சுகிப்பன் என்றே
இவ்விதமாக் கருணையினால் தேவபத்தன்
என்னுமுனி இசைத்தது எலாம் பாகயஞ்ஞன்
இனிமையுடன் கேட்டு மிக மகிழ்ந்தான் அன்றே. **(14)**

(நீயும் சசிவன்னனும், மானந்தி பராயணன் எனும் அந்த ஞானியை பக்தியுடன் வணங்கியும், போற்றியும் அவனுக்கு சகலவிதமான பணிவிடைகளும் அனுகூலமாய் உனது புத்திரனால் செய்யப்படுமானால், அப்பிரம்ம ஞானியின் கருணையினால் துன்பங்கள் நீங்கப் பெற்றவனாய் சுகத்தைப் பெறுவன் என தேவபத்தன் கூறவும்,அதைக் கேட்ட பாகயஞ்ஞன் மிகவும் மகிழ்வுற்றான்.)

***ஞானியிடத்து தன் குறைகளை தந்தை கூறுதல்***

முடியாஉப தேசம் இதென்றுஇவன்
அம்முனிவன்பத மெய்தி மொழிந்தனன்இக்
கொடியான்வெரு வாது குயிற்றியநோய்
கூறற்கு அரிதா யகொடுந் தொழிலே. (13)

**பதவுரை:** முடியா உபதேசம் இது என்று இவன் = முடிவான உபதேசம் இதுவே (தன்னைத் தானாக உணர்ந்த பிரம்ம ஞானியின் விழி நோக்கலே) என இவன் தந்தையும்; அம்முனிவன் பதம் எய்தி மொழிந்தனன் = அம்மாயோகியான மானந்திபராயணரின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி சொல்லத் தொடங்கினான்; இக்கொடியான் வெருவாது குயிற்றிய நோய் = தீய குணங்களையே உடைய எனது மகன் சசிவன்னன் அஞ்சாமல் செய்த காரியங்கள்; கூறற்கு அரிதாய கொடுந்தொழிலே = சொல்வதற்கு இயலாத கொடிய விவகாரங்களாம்.

**பொழிப்புரை:**– தன்னைத் தானாக உணர்ந்த பிரம்ம ஞானியின் விழி நோக்கலே முடிவான உபதேசம் என இவன் தந்தையும் அம்மாயோகியான மானந்திபராயணரின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி சொல்லத் தொடங்கினான். தீய குணங்களையே உடைய எனது மகன் சசிவன்னன் அஞ்சாமல் செய்த காரியங்கள் சொல்வதற்கு இயலாத கொடிய விவகாரங்களாம்.

பின்னர் அவன் தன்னுடைய தனையனோடும்
பேசிய கோ பருவதம் என்கின்ற தானம்
தன்னை அடைந்து அன்புடனே பருவதம்
தன்னில் தயாநிதியாம் சத்தீசன் தனையும் கண்டங்கு
இன்னலற நூற்றெட்டு முறை நன்றாக
இனிமையுடன் வலம்வந்து வணங்கிப் போற்றி

அன்ன சிவன் கருணையினால் ஆங்கிருக்கும்
ஆனந்த பராயணனை நோக்கிச் சென்றான். (15)

(பாகயஞ்ஞன் சசிவன்னனோடு கோ பருவதம் (கோபுராபுரம்) எனும் சத்தீஸ்வரத்தினை அடைந்து, சத்தீஸ்வரரைக் கண்டு, துன்பம் நீங்க வேண்டி, நூற்றெட்டு முறை வலம் வந்து, நமஸ்கரித்து, போற்றி, அந்த சிவனது கருணையினால், பிரம்ம ஞானியான மானந்திபராயணன் இருக்குமிடம் நோக்கிச் சென்றான்.)

சகலமுமே தெரிந்தோனாய் பிரமவித்தாய்ச்
சாந்தனுமாய்த் தகு சீவன் முத்தனாகி
அகில சற்குருவாகித் தீரனாகி
அதிவன்ன ஆச்சிரமி யான அந்த
மகிமை மிகும் சிவயோகி தன்னைக் கண்டு
மருவிய தன் தனயனுடன் பாகயஞ்ஞன்
தகைமையதாய்த் தூரத்தினின்று தானே
தாரணியில் தண்டெனவே பணிந்தான். (16)

(சாத்திரங்கள் அனைத்தும் கற்றவனாய், பிரம்ம வித்தாய், சத்துவ குணம் பொருந்திய சாந்தனுமாய், சீவன்முத்தனுமாய், அகில ஜகத் குருவாய், பிரம்மச்சாரியனாய், அதிவர்ணாசிரமியாய் இருக்கின்ற சிவயோகியான மானந்தி பராயணனைக் கண்டு, தனது மகனுடன் பாகயஞ்ஞன் ஒழுங்குடன் , புறம்பாய் நின்று, பூமியில் கீழே விழுந்து வணங்கினான்.)

ஞானகுரு சசிவன்னனை விழியால் நோக்குதல்

ஈங்குன்திருமுன் பகரும் படியோ
இவனெய்திய தீவினை என்னவெலா
நீங்கும்படி தன்னனு பூதியினால்
நிகழும்விழி வைத்தனன் நின்மலனே. (14)

**பதவுரை:** ஈங்கு உன் திருமுன் பகரும் படியோ =இவ்விடத்தே உன்னுடைய சன்னிதானத்தின் கண் சொல்லத் தக்கதோ; இவன் எய்திய தீவினை என்ன = இவன் செய்த பாவ கர்மங்கள் எத்தனையோ; எலாம் நீங்கும்படி = (சஞ்சித, ஆகாமிய கர்மங்கள்) அனைத்தும் நீங்குமாறு; தன் அனுபூதியினால் நிகழும் = சிவோஹம் எனும் தன்சுவானுபவத்தினால் விளங்கும்படி; விழி வைத்தனன் நின்மலனே = தனது விழிகளை (சசிவன்னன் மேல்) செலுத்தினான் ஈஸ்வரனுக்கு ஒப்பான மாசற்ற ஞானி மானந்தி பராயணன்.



**பொழிப்புரை :** இவ்விடத்தே உன்னுடைய சன்னிதானத்தின் கண் சொல்லத் தக்கதோ, இவன் செய்த பாவ கர்மங்களே நிறைந்த சஞ்சித, ஆகாமிய கர்மங்களான அனைத்தும் நீங்குமாறு சிவோஹம் எனும் தன் சுவானுபவத்தினால் விளங்கும்படி தனது விழிகளை சசிவன்னன் மேல் செலுத்தினான் ஈஸ்வரனுக்கு ஒப்பான மாசற்ற ஞானி மானந்தி பராயணன்.

பக்தியுடன் அடிக்கடியும் பாகயஞ்ஞன்
பணிந்தேத்தி அஞ்சலி பந்தனத்தினோடும்
புத்திரனாம் சசிவர்ணன் சரிதமெல்லாம்
பொருந்திய நல் வினயமுடன் புகன்று மற்றும்
அத்தமில்லா இவன் துயரை நீக்கிக் காத்தல்
ஆனந்த பராயண நின் பாரமென்றான்
உத்தமனாம் சிவயோகி அவனும் கேட்டு அங்கு
ஓங்கிய நற்கருணையினால் ஒப்பலானான். (17)

(பக்தியோடு பாகயஞ்ஞன் பணிந்து, கைகளை கட்டிக்கொண்டு, கும்பிட்டு தன் மைந்தனான சசிவன்னனது வரலாற்றை.நல்ல வினயத்தோடு சொல்லி, தீய நடத்தையால் இவனுற்ற துன்பத்தை ஒழித்துக் காக்க வேண்டியது நினது சுமையாகும் என்றான். உத்தமனாகிய சீவன்முத்தனும், **உலகுபகாரம் ஞானிகள் விவகாரம் அல்லது வேறொரு பெறு பேறும்மிலை அதனால் பிணியுமிலை** என்ற கைவல்ய பாடல் கூறுவதற்கொப்ப, சசிவன்னன் மீது கொண்ட கருணையால் ஒப்புக் கொண்டான்.)

குருவிற்கு பணிவிடை செய்யுமாறு மகனுக்கு தந்தை
அறிவுரை கூறல்

கணியாத பவக்கடு வானதிருக்
கண்வைத்தலும் விட்டன காதுகடும்
பிணியாவையு நல்லபிதா இறைதாட்
பேணிப்பணி யென்று பெயர்ந்தனனே. (15)

**பதவுரை:** கணியாத பவக் கடுவான = கணக்கற்ற சனன மரண வியாதி மட்டுமல்லாமல் ; திருக்கண் வைத்தலும் = கிருபையோடு அருள் நோக்கவும்; விட்டன காது கடும் பிணி யாவையும் = மரணத்திற்கான கொடுமையான வியாதிகள் அனைத்தும் நீங்கிப் போயின ; நல்ல பிதா இறை தாள் பேணிப் பணியென்று பெயர்ந்தனனே = நற்குணவானனான தந்தையானவன், ஈஸ்வரனேயாகிய குருவின் பாதக் கமலங்களை பணிந்து பணிவிடை செய்து குருவருளைப் பெறுவாயாக என அறிவுறுத்தித், தன் ஊருக்குத் திரும்பினான்.

**பொழிப்புரை:** மானந்தி பராயணர் கிருபையோடு அருள் நோக்கவும், கணக்கற்ற பிறவி என்னும் வியாதி மட்டுமல்லாமல், மரணத்தைத் தரக்கூடிய கொடுமையான வியாதிகள் அனைத்தும் நீங்கிப் போயின. நற்குணவானனான தந்தையானவன், ஈஸ்வரனேயாகிய குருவின் பாதக் கமலங்களை பணிந்து பணிவிடை செய்து குருவருளைப் பெறுவாயாக என அறிவுறுத்தி, தன் ஊருக்குத் திரும்பினான்.

அச்சுதனே பின்னர் அவன் கண்டான் அந்த
ஆன்மாவின் அனுபூதி தன்னால் பெற்ற
உச்சமதா மகிழ்வுடனே அனந்த பாவம்
ஒன்றிய அச்சிவர்ணன் தன்னை நோக்கித்
துச்சமிலாப் பரவிச்சைப் பலத்தினாலே
துகளுற்ற அவனையுமே சீடனாக
அச்சமறக் கருணையினால் ஒப்பா நின்றான்
அவ்விச்சை மகிமைதனை என்ன சொல்வாம். **(18)**

(விஷ்ணுவே ! பின்னர் அம்மாயோகியான ஞானி ஆன்மானுபவத்தை யுடையவனாதலால், சதாசர்வகாலமும் மகிழ்ச்சியிலேயே அளவிடதற்கரிய பிரம்ம பாவத்தில் இரண்டற்று ஒன்றி, அச்சசிவன்னனை நோக்கினான். கீழ்மையற்ற பரஇச்சை பலத்தினால் குற்றமுடைய அச்சசிவன்னனை, சீடனாகக் கருணையுடன் ஏற்றுக் கொண்டான்.என்னே இந்த ஞானியின் மகிமை ! பர இச்சைப்பலம் என்பது : **நெருப்பால் வறுக்கப்பட்ட விதையானது முளைப்பதற்குத் தகுதியில்லாமல் போனாலும் சாப்பிடுவதற்கு உகந்ததாம்.அது போல சீவன்முத்தனது ஆசையும் சொற்ப போகத்தைச் செய்யும். பெரிதாக விசனத்தைச் செய்யாது.** என்று பரஇச்சா பிராரத்தத்தைப் பற்றி **ஸ்ரீபஞ்சதசியின் - திருப்தி தீபம் கூறுகிறது.)**

அத்திறமாம் அவனுடைய நோக்கத்தானும்
அன்னவனை அவன் அங்கீகரித்தலானும்
சித்திரமாம் சசிவன்னன் பாவந்தன்னில்
சிலபாவம் நசித்துடனே பிணிகள் தீர்ந்தான்... **(19)**

(மேன்மையான இந்த ஞானியின் பார்வையாலும், அவன் அச்சசிவன் -னனை ஏற்றுக் கொண்டதாலும், குறையுடைய சசிவன்னனது சில பாவங்கள் தீர்ந்தன. நோய்களும் விட்டொழிந்தன...)



*சசிவன்னன் குருவிற்குப் பணிவிடை புரிதலைக் கூறுதல்*

இடனேமுத லாக உவந்துஇறையோன்
ஏவும்பணி செய்திவ னுஞ்சிலநாள்
உடனேஇவ னத்திரு மேனிதனக்
குரியான்என உற்றனன் உம்பனொடே. (16)

**பதவுரை:** இடனே முதலாக உவந்து = தனது தந்தை விட்டுச் சென்ற நாளிலிருந்து மிகுந்த மகிழ்ச்சியுடன்; இவனும் இறையோன் ஏவும் பணி செய்து = சசிவன்னனும் ஈஸ்வரனுக்கு ஒப்பான தனது குருவிற்கு பணிவிடை புரிந்து ; சிலநாள் உடனே = சில நாட்களிலேயே; இவன் = இச்சசிவன்னன்; அத்திருமேனி தனக்குரியான் என = அந்த எழில் தேகத்தினையுடைய குரு தனக்குடையவன் என்று; உற்றனன் உம்பனொடே = குருநாதனை விட்டு ஒரு க்ஷணமும் நீங்காது(சந்ததம் புருடன் தன்னை சாயை போல் விடாமல்) இருந்தனன்.

**பொழிப்புரை:** தனது தந்தை விட்டுச் சென்ற நாளிலிருந்து மிகுந்த மகிழ்ச்சியுடன் ஈஸ்வரனுக்கு ஒப்பான தனது குருவிற்கு பணிவிடை புரிந்த சில நாட்களான அப்பொழுதிலிருந்தே இச்சசிவன்னன் அந்த எழில் தேகத்தினையுடையவன் தனக்குடையவன் என்று சந்ததம் புருடன் தன்னை சாயை(நிழல்) போல் குருநாதனை விட்டு ஒரு க்ஷணமும் நீங்காது இருந்தனன்.

நித்தமுமே மற்று அவன் காட்டம் புல்லு
நிருமல நீர் பல மூலம் சாகமாதி
பத்தியுடன் குருவுக்குக் கொணர்ந்து தந்து
பசுக்களையும் பரிவுடனேஇரட்சித்தானால். **(19)**

(தினந்தோறும் விறகு, புல்,சுத்தமான தண்ணீர், அரிசி, காய்கறிகள் முதலான அனைத்துப் பொருட்களையும் சிரத்தையோடு கொண்டு வருதலும், ஆசிரமத்தின் கண்ணேயுள்ள பசுக்களை மேய்ப்பதுவும், குளிப்பாட்டுதலும் முதலான வேலைகளைச் செய்து வந்தான்.)

மருவியஇச்சேவையினால் வெகுபாவங்கள்
மாய்ந்தன அச்சசிவன்னன் மற்று மெத்தப்
பிரியமுடன் குருவுடைய பாதமாதி பிடித்திடுதல்
அவனுக்குத் தைல அப்பியங்கம்
பரிவுடனே செய்வித்தல் வத்திராதி பங்கமறத்
தோய்த்திடுதல் முதலாஞ் சேவை
விரிவுறவேசெய்ததனால் மகத்தாய் நின்ற
வெகுவிதமாம் பாவங்கள் தீர்ந்தோனானான். **(20)**

(சசிவன்னனது அப்பணிவிடைகளினால் அவனது அநேக பாவங்கள் ஒழிந்தன. குருவினது கை, கால்களை பிரியமுடன் பிடித்து விடுதல். தைலங்கள் முதலானவற்றை அவர் உடல் முழுதும் இதமாக தேய்த்து விடுதல். அவரது ஆடைகள் அனைத்தையும் சுத்தமாக துவைத்திடுதல் முதலான சேவைகள் அனைத்தும் இப்பிறவிக் கடமை எனக் கருதி செய்ததினால் மலை போல் நின்ற வெகுவிதமான பாவங்கள் எல்லாம் மாய்ந்தொழிந்தன.)

குருவிற்கு இவன் செய்த சேவையால் சாதனம் நான்கும் உதித்தன என்றல்

நன்றாமுனிதாள் வழிபாடு அதனால்
நாநாவித மான பிறப்பினைவிட்டு
ஒன்றாகிய வீடுணர் உத்தமர்கட்(கு)
உளசாதன நாலும் உதித்தனவே. (17)

**பதவுரை:** நன்றா முனிதாள் வழிபாடு அதனால் = குருநாதர் மகிழும்படியாக இவன் செய்த சேவைகளின் விளைவினால் ; நாநா விதமான பிறப்பினை விட்டு = பற்பலவிதமான பிறவிகள் எடுப்பதை விட்டு ; ஒன்றாகிய வீடுணர் உத்தமர்கட்(கு) உள = இரண்டற்று ஒன்றாய் உணர்வொளி நிறைவாய் நிற்கக்கூடிய மோட்ச வீட்டை அடைகின்ற உத்தம மாணாக்கனுக்குரியதான ; சாதன(ம்) நாலும் உதித்தனவே = நித்தியாநித்ய வஸ்து விவேகம், இகமுத்திரார்த்த பரபோக விராகம், சமாதி ஷட்க சம்பத்து, முமூட்சுத்துவம் எனும் நான்கு சாதனங்களும் உதயமாயின.

**பொழிப்புரை:** குருநாதர் மகிழும்படியாக இவன் செய்த சேவைகளின் விளைவினால் பற்பலவிதமான பிறவிகள் எடுப்பதை விட்டு இரண்டற்று ஒன்றாய் உணர்வொளி நிறைவாய் நிற்கக்கூடிய மோட்ச வீட்டை அடைகின்ற உத்தம மாணாக்கனுக்குரியதான நித்தியாநித்ய வஸ்து விவேகம், இகமுத்திரார்த்த பரபோக விராகம், சமாதி ஷட்க சம்பத்து, முமூட்சுத்துவம் எனும் நான்கு சாதனங்களும் உதயமாயின.

**விளக்கம்:** **நாநா விதமான பிறப்பினை** என்பது::

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விரு கமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்



என்று மாணிக்க வாசகப்பெருமான் சிவபுராணத்தில் நாநாவித பிறவிகளைக் கூறுகிறார்.

ஆறு தத்துவமாய், நால்வகைப் பிறப்பாய், மூவகை சாதியாய் இருக்கின்ற தூல சரீரங்கள் தோன்றின என்று நாநா ஜீவ வாத கட்டளை கூறுகிறது.

**ஒன்றாகிய வீடுணர் உத்தமர்கட்(கு) உள சாதன நாலும் உதித்தனவே.** என்பது:

சாதனமின்றி யொன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை
ஆதலால் இந்த நான்கும் அடைந்தவர்க்கு அறிவுண்டாகும்

என்ற கைவல்யப் பாடல் ஞானம் பெற விழைபவர்கள் முன்னர் கூறிய நான்கு சாதனங்களையும் அவசியம் பெற்றிருப்பவராய் இருத்தல் வேண்டும் என்கிறது.

உத்தமன், மத்திமன், மந்தன், அதமன் என்று நான்கு விதமாய் இருப்போரில், முதல் மூன்று பேரும் நிஷ்காமிய கர்மத்தால் மலங்களை (பாவங்களை) போக்கி, ஈஸ்வர நமோச்சரணத்தால் சித்த சஞ்சலமான விட்சேபம் நீங்கவும் நான்கு சாதனங்ளை அடையப்பெறுவர். இந்த சாதனங்களால் ஞான குருவின் தரிசனம் கிட்டும். எஞ்சியிருக்கும் ஆவரண சக்தியின் மறைப்பை, குருவின் அனுக்கிரகத்தால் சிரவண, மனன, நிதித்தியாசனத்தாலும், மகாவாக்கிய உபதேசம் எனும் பதார்த்த சோதனத்தாலும் ஞானமடைந்து வீடு பெறுவர். கடையிலுள்ள அதமன் பிரமஞானிக்கு பிரியத்தோடு பணிவிடைகள் செய்வதனால் மட்டுமே நான்கு சாதனங்களைப் பெறமுடியும் என்பதனையே சசிவன்னனது சரித்திரம் சொல்கிறது.

பாவங்கள் நீங்க நிஷ்காமிய கர்மம் செய்ய வேண்டும் என்பது சாத்திர விதி. பணிவிடைகளால் குருவை சந்தோஷமுறச் செய்து, அவர் புசித்த மிச்சத்தை உண்ணுவோனது பாவங்களும் நீங்கப் பெறும் என்பதனை இப்பாடல் மூலம் அறியப் பெறலாம். தற்காலத்தே குருபூஜைகளில் மஹேஸ்வர பூஜையில் குருமார்கள் சாப்பிட்ட இலையில் இருக்கும் மிச்சத்தை சாப்பிடுவதற்கு சீடர்கள் போட்டி போடுவதையும், குருமார்கள் சாப்பிடுவதற்கு முன் கொடுக்கின்ற அன்ன பிரசாதத்தை வாங்க மெய்யன்பர்கள் இச்சிப்பதையும் காணமுடிகிறது.

**இதன் தாற்பரியம்:** மலங்கள் ஒழியப் பெற்று பாவங்கள் நீங்கும் என்பதே.

நான்கு சாதனங்கள் உதிக்கவும் தன் உண்மை சொரூபம் அறிய ஆவலுறுதல்

முனிவன்திரு முன்புள தன்குறைதான்
மொழிவன்சில அஞ்சலி குஞ்சியதாய்ப்
பனிவந்திரு கண்கள் பதங்களிலே
பலகால்வலம் வந்து பணிந்திடவே. (18)

**பதவுரை:**முனிவன் திருமுன்பு = குருநாதர் சன்னிதானத்தில் வணங்கியபடி; உள தன்குறைதான் மொழிவன் =தன் மனதின் கண் தோன்றிய குறைகளைச் சொல்ல ஆரம்பிக்கின்றான்; சில அஞ்சலி குஞ்சியதாய்ப் = தலைமேல் கைகளை வைத்துக் கும்பிட்ட வண்ணம்; பனிவந்து இரு கண்கள் = இரு கண்களிலும் இருந்து கண்ணீருடன்; பதங்களிலே பலகால் வலம் வந்து பணிந்திடவே= குருநாதர் திருவடிகளில் பலமுறை சுற்றி வந்து வணங்கினான்.

**பொழிப்புரை:** குருநாதர் சன்னிதானத்தில் வணங்கியபடி தன் மனதின் கண் தோன்றிய குறைகளைச் சொல்ல ஆரம்பிக்கின்றான். தலைமேல் கைகளை வைத்துக் கும்பிட்ட வண்ணம் இரு கண்களிலும் இருந்து கண்ணீருடன் குருநாதர் திருவடிகளில் பலமுறை சுற்றி வந்து வணங்கினான்.

குறிப்பறிந்த குருவும் சீடனை வினாவுதல்

அருளேவடி வாகிய மாமுனிதான்
அறியாதவர் போல அழுங்கலுறும்
பொருளேதென மைந்தன் நடுங்கினன்இப்
பொல்லாத பவப்புண ரிக்கெனவே. (19)

**பதவுரை:** அருளே வடிவாகிய மா முனிதான் அறியாதவர் போல = கருணை உள்ளம் படைத்த குருவானவர் (சசிவன்னன் எதைக் கேட்கப் போகிறான் என அறிந்திருந்தும் அவன் பக்குவத்தை உணராதவர் போல); அழுங்கலுறும் பொருள் ஏதென = கவலைப்படுவதன் அர்த்தம் எது என்று வினாவ ; மைந்தன் = சீடனான சசிவன்னன்; இப்பொல்லாத பவப் புணரிக்கு = இக்கொடிய சனன மரணம் என்னும் பிறவிக் கடலுக்கு : நடுங்கினன் = அச்சமடைந்தேன்; எனவே=என்று சொல்லவே.

**பொழிப்புரை:** கருணை உள்ளம் படைத்த குருவானவர் , சசிவன்னன் எதைக் கேட்கப் போகிறான் என அறிந்திருந்தும் அவன் பக்குவத்தை உணராதவர் போல, கவலைப்படுவதன் அர்த்தம் என்ன ? என்று வினாவ, அதைக் கேட்ட சீடன், கொடிய சனன மரணம் என்னும் பிறவிக் கடலை எண்ணியே அச்சமடைந்தேன் என்று கூறினான்.

சீடன் வினாவியதற்கு குரு உத்தரம் கூறுதல்

வெருவும்பிற விக்கடல் வித்தரமுன்
வேதாகம கீதை விளம்புமதைக்
குருவுந்தன தன்பன் மனத்தளவிற்
கொளுமாறு தொகுத்திது கூறிடுமே. (20)



**பதவுரை** :வெருவும் பிறவிக் கடல் வித்தரமுன் = அச்சம் தருகின்ற அந்த சனன மரண சமுத்திரத்தின் அர்த்தத்தை;வேதாகம கீதை விளம்பும் = வேத உபநிஷத்துக்கள், பிரம்ம சூத்திரம் , பகவத்கீதை ஆகிய பிரஸ்தானதிரயங்கள் கூறும்; அதைக் குருவும் தனது அன்பன் மனத்தளவில் கொளுமாறு தொகுத்து இது கூறிடுமே = அந்த விஸ்தாரத்தை குருநாதர் சசிவன்னன் மனதில் படியும்படி சுருக்கமாகவும் தெளிவுடனும் கூறினார்.

**பொழிப்புரை:** அச்சம் தருகின்ற அந்த சனன மரண சமுத்திரத்தின் அர்த்தத்தை வேத உபநிஷத்துக்கள், பிரம்ம சூத்திரம், பகவத்கீதை ஆகிய பிரஸ்தானதிரயங்கள் கூறும். அந்த விஸ்தாரத்தை குருநாதர் சசிவன்னன் மனதில் படியும்படி சுருக்கமாகவும் தெளிவுடனும் கூறினார்.

**அவதாரிகை**

**21-முதல் 26-வது** வரையிலான பாடல்களில் பிறவியை கடலுக்கு ஒப்பிடுகிறார். பிறப்பு இறப்பைக் கடலின் நீருக்கும், காமத்தை பாம்பிற்கும், இந்திரியக் கூட்டங்களை மீன்களின் கூட்டத்திற்கும்,இன்பதுன்பங்களை கடலின் அலைகளுக்கும். மனதை கபட சுறா மீனுக்கும்,அகந்தையை ஆமைக்கும், ஆசையை கடலின் ஆழத்திற்கும், கள்ளத்தனத்தை பாறைகளுக்கும், கலகங்களை கிருமிகளுக்கும், குற்றங்களை நுரைக்கும், துறவினை கடலின் கரைக்கும், பெண்களை சுழலுக்கும், கோபத்தை ஆழிப் பேரலைக்கும், போகங்களை முதலைக்கும், வேதாந்த தத்துவ ஞான அனுபவத்தைக் கப்பலுக்கும் ஒப்புவமையாகக் காட்டி பிறவி என்கின்ற சமுத்திரத்திலிருந்து மீள வேண்டினால் அழிவற்ற அறிவினை (பிரம்ம வித்தையை) பெறவேண்டும் என்கிறார்.

பிறவியை சமுத்திரத்திற்கு ஒப்பிட்டுக் கூறுகிறார்

மரண பவங்களான புனலை உடையது
மதியை விழுங்குகாம அரவு பெரியது
கரண ஒழுங்கறாத விடய விரைநுகர்
கனமொடு இயங்குமீன(ம்) மிகவு முகள்வதே. (21)

**பதவுரை:** மரண பவங்களான புனலை உடையது = இறப்பு பிறப்பு என்கின்ற நீரை உடையது; மதியை விழுங்கும் காம அரவு பெரியது = புத்தியை விழுங்கும் ஆசை என்னும் பாம்பு பெரியது; கரண ஒழுங்கு அறாத விடய விரை நுகர் = புறக்கரண, அகக்கரணங்களாகிய இந்திரியங்கள் முறையற்ற விஷயங்களின் வாசனைகளை அனுபவித்துக் கொண்டு; கனமொடு இயங்கு மீனம் மிகவும் உகள்வதே = கூட்டமாகத் திரிகின்ற மீன்கள் (போல)மிக துள்ளுகின்றன.

**பொழிப்புரை:** இறப்பு பிறப்பு என்கின்ற நீரை உடையது. புத்தியை விழுங்கும் ஆசை என்னும் பாம்பு பெரியது. புறக்கரண, அகக்கரணங்களாகிய கர்மேந்திரியங்களும் ஞானேந்திரியங்களும் ,முறையற்ற விஷயங்களின் வாசனைகளை அனுபவித்துக் கொண்டு, கூட்டமாகத் திரிகின்ற மீன்கள் போல மிகவும் துள்ளுகின்றன.

**விளக்கம்: மரண பவங்களான புனலை உடையது** என்பது: கடலிலுள்ள நீர் ஆவியாகி,மேகமாகி ,மழையாக பொழிந்து, நதிகளாகி, கடலில் கலந்து கடல் நீராகிறது. இது இடைவிடாது தொடர்ந்து முடிவேயில்லாது நடந்து கொண்டிருக்கின்றது. அது போலவே பிறத்தலும் இறத்தலும் என்கிறார்.

**அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின் தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம் அந்தம் ஆதி என்மனார் புலவர்** என்று சொல்லும் **சிவஞானபோதம்.** (அவன் அவள் அது என்று சுட்டப்படுகின்ற ஜீவர்கள் கர்ம பலனைக் கொடுக்கின்ற ஈசனால்,பிறவிகளை எடுத்து, வாழ்ந்து, மலத்தில் ஒடுங்கிவிடுவர்.இதுவே ஜீவர்களின் முடிவும் தொடக்கமும் என அறிஞர் கூறுவர்.)

**மீனம் மிகவு முகள்வதே** என்பது: நீரில் மீன்கள் கூட்டம் கூட்டமாக துள்ளுவதைப் போலவே கண், காது, மூக்கு, நாக்கு, துவக்கு ஆகிய ஞானேந்திரியங்களும், கை, கால், முதலான கர்மேந்திரிங்களும் உலக விஷயங்களில் ஈடுபடுகின்றன (குதிக்கின்றன) என்கிறார்.

**இதுவுமது**

பெருமித மென்றுகூறு(ம்) பெருமை உடையது
பிணிக ளெனுங்கெடாத புலவு கமழ்வது
வரும்இடர் இன்பமான திரைகள் பொருவது
மனமெனும் வஞ்சராச மகரம் உறைவதே. (22)

**பதவுரை:**பெருமிதம் என்று கூறும் பெருமை உடையது = தன்னை சிறப்பானவனாகப் பெருமையாகக் கூறிக் கொள்ளும் தன்மை உடையது; பிணிகள் எனும் கெடாத புலவு கமழ்வது = கெட்ட நாற்றங்களை வீசுகின்ற வியாதிகளை உடையது; வரும் இடர் இன்பமான = வருகின்ற சுக துக்கங்கள் ; திரைகள் பொருவது = அலைகளுக்கு ஒப்பானது; மனம் எனும் வஞ்சராச மகரம் உறைவதே = மனம் என்னும் கபட ராஜாவான சுறாமீன் வசிக்கின்றது.

**பொழிப்புரை:** தன்னை சிறப்பானவனாகப் பெருமையாகக் கூறிக் கொள்ளும் தன்மை உடையது . கெட்ட நாற்றங்களை வீசுகின்ற வியாதிகளை உடையது. வருகின்ற சுக துக்கங்களானது அலைகளுக்கு ஒப்பானது. மனம் என்னும் கபட ராஜாவான சுறாமீன் வசிக்கின்றது.



**விளக்கம்: பெருமிதம் என்று கூறு(ம்) பெருமை உடையது** என்று கூறியது சீவர்களிடமுள்ள மமதையையும், **பிணிகள் எனும் கெடாத புலவு கமழ்வது** என்பது தூல தேகத்தின் இழிவையுமாம். **வரும்இடர் இன்பமான திரைகள் பொருவது** என்பது: கடல் அலைகள் மாறி மாறி கரையில் மோதுவது அவற்றின் இயல்பு. அதைப் போல இவ்வுலக வாழ்வில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவது அந்தக்கரணத்தின் தர்மமாகும். **மனம் எனும் வஞ்சராச மகரம் உறைவதே** என்பது : மனம் என்னும் கபட ராஜாவான சுறாமீன் வசிக்கின்ற இடமாக இந்த அந்தக்கரணம் உள்ளது . இந்திரியங்களுக்கு எஜமானனாக இருந்து தனது எண்ணங்களை நிறைவேற்றிக் கொள்ள அவற்றை வழி நடத்துவதால் மனதை தந்திரங்களையுடைய ராஜா என்கிறார்.

**இதுவுமது**

அளவில் அகந்தை ஆமை அபரிமிதமுள
அவாவெ னிறந்த ஆழம் அறியஅரியது
களவு நெருங்குபாரு மலையு முடையது
கலக விடங்கண்மேவு கிருமி நெளிவதே. (23)

**பதவுரை:** அளவில் அகந்தை ஆமை அபரிமிதமுள = அளவற்ற அகந்தை என்கின்ற ஆமைகள் ஏராளமாக உள்ளன; அவா வென் இறந்த ஆழம் அறிய அரியது = ஆசைகளும் நிரம்பிய அதன் ஆழத்தை அறிவது கடினமாம்; களவு நெருங்கு பாரு மலையும் உடையது = கள்ள ஒழுக்கம் நெருங்க பார்க்கும் பாறைகளை யுடையது; கலக விடங் கண் மேவு(ம்) கிருமி நெளிவதே = கலகம் என்னும் விஷங்கள் பொருந்திய புழுக்கள் நெளிகின்றன.

**பொழிப்புரை:** அளவற்றதாயிருக்கின்ற அகந்தை என்கின்ற ஆமைகள் ஏராளமாக உள்ளன. ஆசைகளும் நிரம்பிய அதன் ஆழத்தை அறிவது கடினமாம். கள்ள ஒழுக்கம் நெருங்க பார்க்கும் பாறைகளையுடையது. கலகம் என்னும் விஷங்கள் பொருந்திய புழுக்கள் நெளிகின்றன.

**விளக்கம்: அகந்தை ஆமை** என்பது: ஆமை தனது தலையை அப்போதைக்கப் போது வெளியே நீட்டுவது போலவேதான் அகந்தை என்னும் அபிமானமும் அப்போதைக்கப்போது வெளிக்காட்டும் ; **அவாவெ னிறந்த ஆழம்** என்பது: கடலின் ஆழம் அளவிடற்கரியது போலவே , ஆசையின் ஆழத்தையும் அளக்கமுடியாது. **களவு நெருங்கு பாரு மலை** என்பது:கடலில் ஆங்காங்கே பாறைகள் அடியில் மூழ்கி இருக்கும். அப்பாறைகள் கடலில் செல்லும் படகு,கப்பல்களுக்கு எவ்வாறு ஆபத்தை விளைவிக்குமோ அவ்வாறே கள்ள ஒழுக்கமும் திடீரென தடுத்து ஆபத்தைக் கொடுக்கும். **கலக விடங்கண் மேவு(ம்) கிருமி** என்பது : குழப்பம், சச்சரவு, பகை உணர்வைத் தூண்டி

விடுதல், போர்க் குணம் போன்ற கலகங்கள் விஷத்தன்மையை உடையனவாய் சித்தத்தில் நெளிந்து கொண்டிருப்பதால் புழுக்களுக்கு ஒப்பிட்டார்.

**இதுவுமது**

துகளெனு(ம்) நன்கிலாத நுரைகள் தருவது
துறவினில் இன்பமான கரையை விடஅகல்
மகளி ரெனுந்தவாத வலிய சுழியது
மறலியும் அஞ்சுகோப வடவை எரியதே. (24)

**பதவுரை:** துகளெனு(ம்) நன்கிலாத நுரைகள் தருவது = குற்றங்கள் பொருந்திய கேடுகள் என்னும் நுரைகளைத் தருவது; துறவினில் இன்பமான கரையை விட = சன்னியாசத்தில் உள்ள ஆனந்தத்தின் கரையை விட்டு விட ; அகல் மகளிர் எனும் தவாத வலிய சுழியது = அழகு பொருந்திய பெண்கள் என்னும் நீங்காத வலிமையுள்ள சக்தியை உடையது; மறலியும் அஞ்சும் கோப வடவை எரியதே = எமனும் பயப்படும் கோபம் என்னும் வடவைக் கனலாம்.(வடவைக் கனல் = ஊழி முடிவில் கடலுக்குள் இருந்து கிளம்பி உலகினை அழிக்கும் நெருப்பு.)

**பொழிப்புரை:** குற்றங்கள் பொருந்திய கேடுகள் என்னும் நுரைகளைத் தருவது. சன்னியாசத்தில் உள்ள ஆனந்தத்தின் கரையை விட்டு விட அழகு பொருந்திய பெண்கள் என்னும் நீங்காத வலிமையுள்ள சக்தியை உடையது . எமனும் பயப்படும் கோபம் என்னும் வடவைக் கனலாம்.(வடவைக் கனல் என்பது சுனாமி எனும் ஆழிப்பேரலை என தற்காலத்தில் அழைக்கப்படுகிறது.)

**விளக்கம்: துகளெனு(ம்) நன்கிலாத** என்பதற்கு கைவல்யம் கூறுவது: **சுத்தமாம் சத்துவமே உண்மையாகும் துகள் இருள் போனால் மனம் என் சொல்லும்** - துகள் என்றால் ரஜோ குணம் ;இருள் என்றால் தமோ குணம். இங்கே ரஜோகுணமே துகள் என்று சொல்லப்படுகிறது. **சுத்தமோடு அழுக்கு இருட்டாச் சொல்லும் முக்குணமும் மூன்றாம்** - சத்துவ குணம் சுத்தம் என்றும்,ரஜோ குணம் அழுக்கு என்றும்,தமோ குணம் இருட்டு என்றும் பொருளாம்.**மருவு ரஜோ குணமாகில் உலக தேக வாதனையாம் சாத்திர வாதனையுமாகும்** -ரஜோகுணத்தின் கண் வசப்படும் போது, உலக வாசனை.தேக வாசனை,சாத்திர வாசனை உண்டாம். இவ்வாசனைகளே அழுக்காகும்.எனவே துகள் என்பது ரஜோ குணத்தினது தோஷத்தைக் குறிப்பது. அதனாவேயே இவரும் ரஜோகுணம் நன்மை தராதது என்கிறார், **நுரைகள் தருவது** என்பது: அழுக்கு நிறைந்த நீரில் நுரைகள் உண்டாவது போல,இந்த ரஜோகுணம் எனும் அழுக்கிலிருந்து மனதில் உண்டாகின்ற வாசனைகளே நுரைகளாம்.



**துறவினில் இன்பமான கரை** என்பது: நடுக்கடலில் தத்தளிப்பவனுக்கு கரை தென்பட்டால் எவ்விதமாய் மகிழ்ச்சியுறுவானோ அவ்விதமே துறவிலும் ஆனந்தத்தை அடைவான் என்பது. சனன மரண சம்சாரத்தில் தத்தளிப்பவனுக்கு, துறவறம் என்பது கரையை அடைந்தவனுக்கு ஒப்பாகும் என்கிறார்.

**அகல் மகளி ரெனும் தவாத வலிய சுழியது** என்பது: கடலின் சுழல்களில் ஒருவன் சிக்கிக்கொண்டால் அதிலிருந்து அவன் மீளுதல் கடினம். அதைப் போல்வதே அழகு பொருந்திய பெண்கள் எனும் சுழல்களிலிருந்து மீள்வதும் கடினம் என்கிறார்.

**மறலியும் அஞ்சும் கோப வடவை** என்பது :எமனைப் போல கோபத்தை உடையவர் எவருமிலர்.கடலில் எழுகின்ற ஆழிப் பேரலை (சுனாமி) எமனையே அஞ்ச வைக்கக் கூடியது.சீவர்களது கோபமும் கடலின் வடவை நெருப்பைப் போன்றது.(சிசுபாலன் தனது கோபத்தினால், கிருஷ்ண பகவானை நிந்தை செய்து அதன் காரணத்தால், சுதர்சன சக்கரத்தினால் உயிரிழந்தான் என்று மகாபாரதம் கூறுகிறது.)

**இதுவுமது**

வெருவரு கின்றபோக முதலை அடர்வது
விவிதம் அனந்தமான துறையும் அறிபவர்
ஒருவர் கடந்து போக விரகில் எழுபவ
வுததி விளம்பயாவர் உலகில் அறிவரே. (25)

**பதவுரை:** வெருவருகின்ற போக முதலை அடர்வது = அஞ்சத் தக்க போகம் என்னும் முதலைகள் நிறைந்தது; விவிதம் அனந்தமான துறையும் அறிபவர் = பற்பலவாக இருக்கின்ற அளவற்ற சமயங்களின் மார்க்கங்களையும் அறிகின்றவர்களில்; ஒருவர் கடந்து போக = எவரேனும் ஒருவர் அக்கடலைக் கடந்து செல்ல ; விரகில் = விவேகமற்றவர்கள் என்றிடில்; எழுபவ வுததி விளம்ப யாவர் உலகில் அறிவரே = மீண்டும் மீண்டும் எழுகின்ற இப்பிறவிக் கடலின் எண்ணிக்கையைக் கூற உலகில் எவரால் இயலும்.

**பொழிப்புரை:** அஞ்சத்தக்கதான போகம் என்னும் முதலைகள் நிறைந்தது. பற்பலவாக இருக்கின்ற அளவற்ற சமயங்களின் மார்க்கங்களையும் அறிகின்றவர்களில் எவரேனும் ஒருவர் அக்கடலைக் கடந்து செல்ல விவேகம் உடையவர்கள் இல்லை என்றிடில்,மீண்டும் மீண்டும் எழுகின்ற இப்பிறவிக் கடலின் எண்ணிக்கையைக் கூற உலகில் வேறு எவரால் இயலும்.

**விளக்கம்: போக முதலை அடர்வது** என்பது : உலக விஷயத்திலுள்ள சுகங்களை அனுபவிக்க சீவர்கள் போகங்களை நாடுவர். அப்போகங்கள் இவர்களை முதலையைப் போல கவ்வி விடும்.அதிலிருந்து தப்பிப்பது கடினம். எனவே போகங்களை முதலைகளுக்கு ஒப்பிட்டார்.

*பிறவிக் கடலை அறிவுடையோர் கடப்பர் எனல்*

பொறிவழி சென்று மீளும் அவல மதிகொடு
பொருசம யங்களாறும் அறிய விழுமதில்
அறிவுஅழி வொன்றிலாத பொருளது எனவுள
அனுபவ அங்கமேறும் அறிஞர் அகல்வரே. (26)

**பதவுரை:** பொறிவழி சென்று மீளும் அவல மதிகொடு = இந்திரியங்களின் துணை கொண்டு இயங்குகின்ற மந்த புத்தியைக் கொண்டு; பொரு சமயங்கள் ஆறும் அறிய விழும் அதில் = ஒன்றுக்கொன்று விரோதமாய் இருக்கின்ற ஆறு சமயவாதிகளும்அறிந்தே இப்பிறவிக் கடலில் விழுவார்கள்; அறிவு அழிவொன்றிலாத பொருள் அது என = அறிவே அழிவற்ற பொருளான பிரம்ம வஸ்து என்று; உள அனுபவ அங்கமேறும் அறிஞர் அகல்வரே = உள்ளத்தே சுவானுபவம் என்ற கப்பலில் ஏறிய அறிஞர்கள் இந்தக் கடலைக் கடப்பார்கள்.

**பொழிப்புரை:** இந்திரியங்களின் துணை கொண்டு இயங்குகின்ற மந்த புத்தியைக் கொண்டு, ஒன்றுக்கொன்று விரோதமாய் இருக்கின்ற ஆறு சமய வாதிகளும், அறிந்தே இப்பிறவிக்கடலில் விழுவார்கள். அறிவே அழிவற்ற பொருளான பிரம்ம வஸ்து என்று உள்ளத்தே சுவானுபவம் என்ற கப்பலில் ஏறிய அறிஞர்கள் இந்தக் கடலைக் கடப்பார்கள்.

**விளக்கம்: பொரு சமயங்கள் ஆறும் அறிய விழும் அதில்** என்பது: ஒன்றின் கோட்பாடு பிறிதொன்றின் கோட்பாட்டிற்கு விரோதமுடையதாய் இருக்கின்ற காரணத்தால் பொரு சமயங்கள் என்றார். ஆறு சமயங்களாவன: சார்வாகம், நியாயம், வைசேஷிகம், சாங்கியம்,பாதஞ்சலம், பூர்வ மீமாம்சை. ஆதிசங்கரரால் பிற்காலத்தே ஆறு சமயங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அவையாவன: சைவம்,வைணவம்.சாக்தம், காணாபத்யம்,கௌமாரம், சௌரம்.

இப்படி இருவகையாக சொல்லப்படுவதில் எதைக் குறிப்பிடுகிறார் என்று ஆய்ந்தோமானால், சார்வாகம் முதலியவற்றையே இவர் சொல்வதாகக் கொள்ள வேண்டும். ஏனெனில், இப்பாடலின் முதல் அடியில் பொறி வழி செல்பவை என்று குறிப்பிடுகிறார். இச்சமயங்கள் வெவ்வேறு சித்தாந்தங்களை உடையன. சார்வாகம் நாஸ்திக மதம், தேகமே ஆத்மா எனும் கோட்பாடு உடையது. ஆத்மா நித்தியப் பொருள்; தேகம் நிலையற்றது என்பதால் இம்மதம் தள்ளத்தக்கது. நியாயம் மற்றும் வைசேஷிக மதத்தில் பிரத்தியட்சம், அனுமானம். உபமானம் ஆகிய முப்பிரமாணங்கள் மட்டுமே அங்கீகரிக்கப்படுகிறது. **மற்றை முப்பிரமாணத்தால் வத்து நிர்ணயம்கூடாதே** - என்று கைவல்யம், பஞ்சதசி, விசாரசாகரம் முதலிய சாத்திரங்களும் சொல்வதால் இவ்விரண்டு



மதங்களும் விருத்தமானவையாம். சாங்கிய மதத்தில் ஈஸ்வரன் அங்கீகரிக்கப்படவில்லை.பிரகிருதியும், புருஷர்களுமே மோட்ச காரணம் என்று கூறும். பாதஞ்சலத்தில் ஈஸ்வரனது அங்கீகாரம் உண்டு, சமாதியால் மோட்சம் என உபாசனையைச் சொல்லும். பூர்வ மீமாம்சையில் ஈஸ்வரன் அங்கீகரிக்கப்படவில்லை. கர்மத்தால் உண்டாகும் விஷய சுகமே புருஷார்த்தம் என்பதாம். இவ்வாற்றால் ஒன்றுக்கொன்று விரோதமுடையது.

ஆதி சங்கரரால் சொல்லப்பட்ட சைவம் (சிவன்). வைணவம் (விஷ்ணு). சாக்தம் (தேவி), காணாபத்யம் (விநாயகர்), கௌமாரம் (முருகன்), சௌரம் (சூரியன்) முதலிய ஆறு மதங்களும் பக்தி மார்க்கத்தை மட்டுமே போதிப்பன. சீவர்களது சித்தத்தில் எற்படும் சஞ்சலம் என்னும் விட்சேபம் நீங்க, ஈஸ்வர நமோச்சரணம் அவசியமானதாலும், கலிகாலத்தில் உள்ளோருக்கு ஆவரணம் (மறைப்பு) நீங்க பக்தி மார்க்கமே சிறந்த உபாயம் என்று கருதியே அத்துவிதத்தை போதித்த ஆதிசங்கரப் பெருமான்,இம்மதங்களை நிறுவினார் என்பதையும், சிவன்,விஷ்ணு,தேவி,விநாயகர்,முருகன்,சூரியன் ஆகிய இத்தெய்வங்கள் அனைத்தும் ஈஸ்வரனின் அம்சமே என்ற உண்மையை உணர்ந்தவராதலினாலும், இச்சமயங்கள் பக்தி நெறியையே வழியாகக் கொண்டுள்ளமையால் ,இச்சமயங்களின் கோட்பாட்டில் விரோதம் இல்லை என்பதாலும் **பொரு சமயங்கள் ஆறும்** என்பதாக இவைகளைக் குறிப்பிட வில்லை என்பது திண்ணம்.

மேலும் இந்நூலாசிரியர், தத்துவராய சுவாமிகள் தமிழ் புலமை மட்டுமின்றி, வடமொழியான சமஸ்கிருதத்திலும் புலமையுடைய வராதலினாலும், சுத்த அத்வைதத்தையே கடைப்பிடித்து வந்தமையாலும், பேத ஞானத்தை அறிவுறுத்துகின்ற இம்மதங்களின் (சார்வாகம் முதலியவற்றின்) சித்தாந்தங்களை தெளிவுற அறிந்திருந்தவராதலினாலும் இச்சமயங்களின் வழி நடப்போர் பிறவிக் கடலில் விழுவர் என்றார் என்பதாம்.

**அனுபவ அங்கமேறும் அறிஞர்** என்பது: சுவானுபூதி என்பதை கப்பலுக்கு ஒப்பிடுகிறார்.கடலைக் கடக்க கப்பல் வேண்டும்.அதுபோல சுருதி, யுக்தி,அனுபவத்தால் (கேட்டல்,சிந்தித்தல், தெளிதலால்) பிறவியை கடக்க வேண்டும் என்பதாம்.

*ஞானம் என்ற கப்பலில் ஏறி பிறவி எனும் கடலைக் கடக்கலாம் எனல்*

புணரி கடந்துபோக விரகில் எனமொழி
பொழுது புலம்பிஆவி புதல்வன் இறுமுனம்
உணர்வெனும் அங்கமேறும் அறிஞர் அகல்வர் என்(று)
உரையை வழங்கிநாதன் உவகை அருளவே. (27)

**பதவுரை:** புணரி கடந்துபோக விரகில் என = (ஆறு சமயத்தவர்களாலும் கூட) பிறவிக் கடலைக் கடந்து செல்ல யுக்தி இல்லை என்று; மொழி பொழுது = (குருநாதன்) சொல்லிய மாத்திரத்திலேயே ; புலம்பி ஆவி புதல்வன் இறுமுனம் = வருத்தமுற்ற சீடனது உயிர் பிரிவதற்கு முன்னம்; உணர்வெனும் அங்கமேறும் அறிஞர் அகல்வர் என்று = ஞானம் என்னும் கப்பலில் ஏறி அறிஞர்(இப்பிறவிக் கடலை) கடப்பார் என்ற ; உரையை வழங்கி நாதன் உவகை அருளவே = வார்த்தைகளைக் கூறி,குருநாதரானவர் சீடனை மகிழ்ச்சியடையச் செய்தார்.

**பொழிப்புரை:** ஆறு சமயத்தவர்களாலும் கூட, பிறவிக் கடலைக் கடந்து செல்ல யுக்தி இல்லை என்று குருநாதன் சொல்லிய மாத்திரத்திலேயே வருத்தமுற்ற சீடனது உயிர் பிரிவதற்கு முன்னம், ஞானம் என்னும் கப்பலில் ஏறி அறிஞர் இப்பிறவிக் கடலைக் கடப்பார் என்ற வார்த்தைகளைக் கூறி,குருநாதரானவர் சீடனை மகிழ்ச்சியடையச் செய்தார்.

## அவதாரிகை

இப்பிறவிக் கடலை கடப்பதற்கான ஞானத்தை சீடன் வேண்ட, பர ஞானம் (சமாதி ஞானம்), அபர ஞானம் (சாத்திரத்தால் உண்டாகும் விசார ஞானம்) எனும் இரண்டையும் விளக்கியும், புராண இதிகாசங்களின் தாற்பரியத்தை உணர வேண்டும் என்றும், இயல், இசை, நாடகங்கள் முதலானவைகளும்,அறுபத்தி நான்கு கலைகளும் அயலறிவு என்றும், பொறிகளால் அறிவதும்.ஈசனையும் தன்னையும் வேறாக அறிவதும் உண்மை அறிவல்ல என்றும், தன்னைத் தானாக அறியும் அறிவே உண்மையான அறிவு என்றும் குரு போதிப்பதை பாடல் 28- முதல் 38-வரையில் கூறுகிறார்.

### சீடன் உபதேசிக்க வேண்டுதல்

வாழியென இறைவனடி தொழுதுவரு பவமாம்
ஆழியினை அகலும்அறிவு அருளுகஎன அவரே. (28)

**பதவுரை:** வாழியென இறைவனடி தொழுது = குருவை போற்றி வணங்கி; வரு பவமாம் ஆழியினை = வந்து கொண்டே இருக்கின்ற இப்பிறவிக்கடலை ; அகலும் அறிவு அருளுக என = கடப்பதற்கான ஞானத்தை எனக்கு அளித்து அருள் புரியுமாறு கேட்கவும்;அவரே= குருநாதரும்,

**பொழிப்புரை:** குருவை போற்றி வணங்கி ,வந்து கொண்டே இருக்கின்ற இப்பிறவிக் கடலை கடப்பதற்கான ஞானத்தை எனக்கு அளித்து அருள் புரியுமாறு சீடன் கேட்கவும்,குருநாதரும் கூற ஆரம்பிக்கிறார்



### குரு சீடனுக்கு உபதேசிக்க ஆரம்பிக்கிறார்

பரஅறிவும் அபரஅறிவு எனவும்இரு பரிசாம்
திரஅறிவை அறியும்அவர் மொழிவர்தெளி வுறவே. (29)

**பதவுரை:** பர அறிவும் அபர அறிவு எனவும் இரு பரிசாம் =பர ஞானம் என்றும் அபரஞானம் என்றும் இரண்டு வகைகளாம்;திரஅறிவை அறியும் அவர் மொழிவர் தெளிவுறவே = இந்த ஸ்திர ஞானத்தை சுருதி, யுக்தி, அனுபவத்தால் தெளிந்த குருவும் கூறத் தொடங்கினார்.

**பொழிப்புரை:** பர ஞானம் என்றும் அபரஞானம் என்றும் இரண்டு வகைகளாம், இந்த ஸ்திர ஞானத்தை சுருதி, யுக்தி, அனுபவத்தால் தெளிந்த குருவும் கூறத் தொடங்கினார்.

### இதுவுமது

அபரவுணர்வு அருமறைகள் முதல்அகில கலைகளும்
உபரமம்அது அறஉதவும் உணர்வுபர உணர்வே. (30)

**பதவுரை:** அபரவுணர்வு அருமறைகள் முதல் அகில கலைகளும் = அபரஞானம் என்பது நான்கு வேதங்கள் முதல் அனைத்து சாத்திரங்களையும் கற்றுத் தெளிதலாம் (விசார ஞானமாம்);உபரமம் அது அற உதவும் உணர்வு பர உணர்வே = பிரம்ம சொரூபமே தான் எனத் தரும் அறிவே (சமாதி ஞானமே) பர ஞானமாம்.

**பொழிப்புரை:** அபரஞானம் என்பது நான்கு வேதங்கள் முதல் அனைத்து சாத்திரங்களையும் கற்றுத் தெளிதலாம்(விசார ஞானம்). பிரம்ம சொரூபமே தான் எனத் தரும் அறிவே(சமாதிஞானமே) பர ஞானமாம்.

### நூல்களின் பிராணனை அறிவதே அபர ஞானம் எனல்

புராணம்இதி காசம்எவை யும்பொருள் அனைத்தின்
பிராணன்அறி யாதுஉள விடத்துஇவை பிதற்றே. (31)

**பதவுரை:** புராணம் இதிகாசம் எவையும் = பதினென் புராணங்கள், இரு இதிகாசங்கள் போன்ற எல்லா சாத்திரங்களிலும் உள்ள ; பொருள் அனைத்தின் பிராணன் = தாற்பரியமான (இலட்சியார்த்தமான) மூச்சை; அறியாதுஉள இடத்து இவை பிதற்றே =அறியாமல் அவற்றை (கதைகளாக மட்டுமே) படிப்போருக்கு இவை அனைத்தும் அறிவின்றி பேசுதலுக்கு ஒப்பாகும்.

**பொழிப்புரை:** பதினெண் புராணங்கள், இரு இதிகாசங்கள் போன்ற எல்லா சாத்திரங்களிலும் உள்ள தாற்பரியமான இலட்சியார்த்தத்தின் மூச்சை அறியாமல் அவற்றை கதைகளாக மட்டுமே படிப்போருக்கு இவை அனைத்தும் அறிவின்றி பேசுதலுக்கு ஒப்பாகும்.

**பதினென் புராணங்களாவன :** (1) பிரமம், (2)பதுமம், (3)வைணவம், (4)சைவம், (5) பாகவதம், (6) பவிடியம் (7) நாரதீயம், (8) மார்க்கண்டேயம், (9) ஆக்கினேயம், (10) பிரமகைவர்த்தம், (11) இலிங்கம், (12) வராகம், (13) ஸ்காந்தம், (14) வாமனம், (15) மற்சம், (16) கூர்மம், (17) காருடம், (18) பிரமாண்டம்.

**இரண்டு இதிகாசங்களாவன:** (1) இராமாயணம், (2) மஹாபாரதம்.

*அபர, பர ஞானங்கள் அறிவோரைக் கூறுதல்*

ஆகம விதங்கள்அறி வார்அபரம் அறிவார்
யோகமொடு உறங்கும்அவ ரேபரம் உணர்ந்தார் (32)

**பதவுரை:** ஆகம விதங்கள் அறிவார் அபரம் அறிவார் = வேதாந்த நூற்களிலுள்ள வாக்கியங்களின் அர்த்தத்தை உள்ளவாறு உணரும் சாமர்த்தியம் உடையோரே அபர ஞானத்தை அடைவார்;யோகமோடு உறங்கும் அவரே பரம் உணர்ந்தார் = பிரம்ம நிஷ்டராய், நனவினில் சுழுத்தியாய் பிரம்மானந்தத்திலே இருக்கின்ற அவர்களே பர ஞானிகளாம்.

**பொழிப்புரை:** வேதாந்த நூற்களிலுள்ள வாக்கியங்களின் அர்த்தத்தை உள்ளவாறு உணரும் சாமர்த்தியம் உடையோரே அபர ஞானத்தை அடைவார். பிரம்ம நிஷ்டராய், நனவினில் சுழுத்தியாய் பிரம்மானந்தத்திலே இருக்கின்ற அவர்களே பரஞானிகளாம்.

*தன்னை அறிவதே ஞானம் எனல்*

இயலறிவது இசையறிவது இனமறிவது உளதாம்
அயலறிவது அறிவதல அறிவுஅறிவது அறிவே. (33)

**பதவுரை:** இயலறிவது இசையறிவது இனமறிவது உளதாம் = இயல், இசை, நாடகம் என்னும் மூன்றிலும் திறமையுள்ளவராய் இருந்தாலும்; அயல் அறிவது அறிவதல = தன்னை அன்னியமாக அறிவது ஞானமல்ல ; அறிவு அறிவது அறிவே = அறி பொருளாகும் தன்னை அனுபவித்து அறிய வேண்டியதே ஞானமாகும்.

**பொழிப்புரை:** இயல், இசை, நாடகம் என்னும் மூன்றிலும் திறமையுள்ளவராய் இருந்தாலும், தன்னை அன்னியமாக அறிவது ஞானமல்ல. அறி பொருளாகும் தன்னை அனுபவித்து அறிய வேண்டியதே ஞானமாகும்.

*விஷயஞானத்தினால் தெளிவுபெற இயலாது எனல்*

நவிலுகலை அறுபத்து நாலும்அறி வாரும்
பவலயம்அது அறுசுத்த பரமம்அறி யாரே. (34)



**பதவுரை:** நவிலு கலை அறுபத்து நாலும் அறிவாரும் = சொல்லப்படும் அறுபத்து நான்கு கலைகளையும் கற்றுத் தெளிந்தோரும்; பவ லயம் அது =அவைகள் யாவும் பிறவியில் இரண்டறக் கலப்பதையும்; அறு சுத்த பரமம் அறியாரே = பரம் பொருளான சுத்த பிரம்மத்தையும் அறி ய மாட்டார்கள்

**பொழிப்புரை:** சொல்லப்படும் அறுபத்து நான்கு கலைகளையும் கற்றுத் தெளிந்தோரும், அவைகள் யாவும் பிறவியில் இரண்டறக் கலப்பதையும் , பரம் பொருளான சுத்த பிரம்மத்தையும் அறிய மாட்டார்கள் **(அறு = பரம்பொருள்; பவம் = பிறப்பு, இறப்பு ; லயம் = இரண்டறக் கலத்தல்)**

*ஞானி, அஞ்ஞானி எவ்விதம் இருப்பர் எனக் கூறல்*

ஆகஅறி வாளர்அறி வார்இவை அனைத்தும்
ஏகஅறி வாளர்இவை யாவும்அறி யாரே. (35)

**பதவுரை:** ஆக அறிவாளர் அறிவார் இவை அனைத்தும் = தேக அபிமானம் கொண்ட விஷய ஞானிகள் உலக காரியங்களை திறம்பட அறிவார்கள் ; ஏக அறிவாளர் இவை யாவும் அறியாரே = அத்துவித ஞானமுடையோர் இந்த அறுபத்து நான்கு கலைகளையும்,இயல்,இசை,நாடகம் முதலான எவற்றையும் அறிய விரும்ப மாட்டார்கள்.

**பொழிப்புரை:** தேக அபிமானம் கொண்ட விஷய ஞானிகள் அறுபத்து நான்கு கலைகள்,. இயல்,இசை,நாடகம் முதலான உலக காரியங்களை திறம்பட அறிவார்கள். அத்துவித ஞானமுடையோர் வேதங்களின் கருத்துக்களை பிரதிபாதிக்கின்ற சாத்திரங்களைத் தவிர வேறு எதனையும் அறிய விரும்பமாட்டார்.

*வீடு பெற விசாரித்தல் வேண்டும் எனல்*

ஐயறிவு அறிந்துஅவை அடங்கினவ ரேனும்
மெய்யறிவு இலாதவர்கள் வீடதுபெ றாரே. (36)

**பதவுரை:** ஐயறிவு அறிந்து = ஞானேந்திரியங்களின் இயல்புகளை அறிந்து ; அவை அடங்கினவரேனும் = (புத்தியைக் கொண்டு) அவற்றை அடக்கினவர்களானாலும்; மெய்யறிவு இலாதவர்கள் வீடது பெறாரே = ஆன்மாவைப் பற்றிய உண்மை அறிவு இல்லாதவர்களாயின் பரமானந்த பிராப்தி எனும் மோட்சத்தை அடையமாட்டார்கள்.

**பொழிப்புரை:** ஞானேந்திரியங்களின் இயல்புகளை அறிந்து, புத்தியைக் கொண்டு அவற்றை அடக்கினவர்களானாலும் ஆன்மாவைப் பற்றிய உண்மை அறிவு இல்லாதவர்களாயின் பரமானந்த பிராப்தி எனும் மோட்சத்தை அடையமாட்டார்கள்.

### அறிய வேண்டியது உண்மை அறிவு எனல்

பூசனையும் அதுசகல பொருளும்அறி தமையும்
ஈசனையும் வேறதற அறிவதுஅறி வெனலே. (37)

**பதவுரை:** பூசனையும் = வழிபடுதலையும் ;அதுசகல பொருளும் = அப்பூஜை செய்வதற்கான எல்லாப் பொருட்களும் ; அறி தமையும் = அறிகின்ற ஜீவனான தன்னையும் ; ஈசனையும் = மாயா பிரதிபிம்பரான ஈஸ்வரனையும்; வேறதற = அபேதமாக ; அறிவது அறிவு எனலே = அறிகின்றதே ஞானம் என்பதாகும்.

**பொழிப்புரை:** வழிபடுதலையும், அப்பூஜை செய்வதற்கான எல்லாப் பொருட்களும் அறிகின்ற ஜீவனான தன்னையும் மாயா பிரதிபிம்பரான ஈஸ்வரனையும் அபேதமாக இரண்டற்று ஒன்றாக அறிகின்றதே ஞானம் என்பதாகும்.

### இதுவுமது

மெய்ம்மைஅறி வல்லதமில் வேறறிவ தெல்லாம்
தம்மைஅறி யும்அறிவ தேஅறிவு தானே. (38)

**பதவுரை:** மெய்ம்மை அறிவல்ல தமில் வேறறிவது எல்லாம் = தன்னை விட்டு வேறாக அறிகின்றதெல்லாம் உண்மையான ஞானமல்ல; தம்மை அறியும் அறிவு அதே அறிவு தானே = (வேதப்பிரமாணங்களையும், மகா வாக்கியத்தையும் விசாரித்து) தன்னைத் தானாகவே உணருகின்ற அந்த அறிவே தானாகும் ஞானமாம்.

**பொழிப்புரை:** தன்னை விட்டு வேறாக அறிகின்றதெல்லாம் உண்மையான ஞானமல்ல .வேதப் பிரமாணங்களையும்,மகா வாக்கியத்தையும் விசாரித்து தன்னைத் தானாகவே உணருகின்ற அந்த அறிவே, தானாகின்ற ஞானமாம்.

### அவதாரிகை

குரு, தான் யார் என அறிய வேண்டும் என்று கூறவும்,அதனால் குழப்பமடைந்த சீடன் இந்த தூல தேகந்தானே நான் என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். நான் என்பதற்கு வேறு பொருள் ஏதேனும் உண்டோ குருவே என **39-வது** பாடலில் வினவ, தூல தேகமும் (அன்னமய கோசமும்) நீ அல்ல என்றும்,கண்முதலான பொறிகளும், பிராணனும் (பிராணமய கோசமும்) நீ அல்ல என்றும், மனமும்(மனோமய கோசமும்) நீ அல்ல என்றும் , புத்தியும் (விஞ்ஞானமய கோசமும்) நீ அல்ல என்றும், சித்தமும்,அகங்காரமும் நீ அல்ல என்றும் தூல, சூக்கும தேகங்களைப் பற்றி தகுந்த பிரமாணங்களோடு நேதி செய்த பின், நீ சகலத்தையும் அறிகின்ற பொருளாய் இருக்கின்றாய் என்றும் குரு கூறுவதாக பாடல் **40-முதல் 56-வது** வரையில் சொல்கிறார்.



### தான் என்பதன் பொருள் யாது எனல்

தானெனும் உடம்புஇது தனைத்தவிர வேறா
யானெனும் அருத்தம்உள வோஅருளுக எனவே. (39)

**பதவுரை:** தானெனும் உடம்பு = நான் என்று அழைக்கப்படுவது இந்தத் தூல தேகமாம்; இது தனைத் தவிர வேறாய் யானெனும் அருத்தம் உளவோ = இத்தேகத்தைத் தவிர நான் என்று அழைக்கக் கூடிய பொருள்(தேகி) வேறு ஏதேனும் உள்ளனவா; அருளுக எனவே = கருணை காட்டுங்கள் குருவே என்றவாறு.

**பொழிப்புரை:** நான் என்று அழைக்கப்படுகின்ற இந்தத் தூல தேகத்தைத் தவிர, நான் என்பதற்கு வேறு அர்த்தம் ஏதேனும் உள்ளனவா கருணை காட்டுங்கள் குருவே, என்றவாறு.

### தூல தேகத்தின் அகங்காரத்தைக் கூறல்

எனதாடை பொன்பூ மகன்தையல் பாய்மா
விபங்கண் முகங்கால்கை மெய்என்ன வென்றும்
தனதா உரைப்பான் வகுத்துஇந்த ஊனைத்
தான்என்று அயர்த்தும் சொலத்தக்க தன்றே. (40)

**பதவுரை:** எனது ஆடை பொன் பூ மகன் தையல் பாய்மா இபம்= என்னுடைய உடை,தனம்,நிலம், மகன்,மனைவி, பாய்கின்ற குதிரை , யானை; கண் முகங் கால் கை மெய் என்ன = கண்,முகம், கால்,கை, உடம்பு என்பதெல்லாம் ; என்றும் தனதாய் உரைப்பான் வகுத்து = எப்போதும் தனக்குரித்தானது என்று வெவ்வேறாகப் பிரித்து சொல்வான்; இந்த ஊனைத் தான் என்று அயர்த்தும் சொலத் தக்கதன்றே = இந்தத் தூல தேகமே தான் என்று வேடிக்கையாக, மறந்தும் சொல்லத் தக்கது அல்லவாம்.

**பொழிப்புரை:** என்னுடைய உடை,தனம்,நிலம், மகன்,மனைவி, பாய்கின்ற குதிரை , யானை கண்,முகம், கால்,கை, உடம்பு என்பதெல்லாம் எப்போதும் தனக்குரித்தானது என்று வெவ்வேறாகப் பிரித்து சொல்வான். இந்தத் தூலதேகமே தான் என்று வேடிக்கையாக,மறந்தும் சொல்லத் தக்கது அல்லவாம்.

### இத்தூல உடலை இரதத்திற்கு ஒப்பிடுகிறார்

தாளாக ஊராழி யார்வெந்நில் வீணாத்
தண்டாக வன்மார்பு தட்டாக மொட்டா
நாளா மலர்ச்சென்னி கூந்தல் கொடித்தேர்
நாணாளும் ஊர்வானின் வேறாக நாடே. (41)

**பதவுரை:** தாளாக = கால்களானது ;ஊராழி = உருளுகின்ற (தேரின்) சக்கரம் போல்வது ; யார் வெந்நில் = ஆறு(வாய்க்காலின் பள்ளம்) போன்ற முதுகு எலும்பு; வீணாத் தண்டாக = முதுகுத்(வேரின் அச்சுத்) தண்டம் (போன்றது); வன்மார்பு தட்டாக =கொடிய மார்பகமானது ரதம் நடத்துபவன் நிற்கும் தட்டாம் ; மொட்டா நாளா மலர்ச் சென்னி = தினம் பூக்கின்ற தாமரை மொட்டாம் இந்தத் தலை; கூந்தல் கொடித் தேர் = நீண்ட தலை முடி தேரின் கொடியாம்; நாள் நாளும் ஊர்வானின் வேறாக நாடே = தினமும் நடத்துபவனினும் இத்தேரானது வேறாக இருப்பதைப் போல. நீ இவ்வுடம்பினைப் பார்.

**பொழிப்புரை:** கால்களானது தேரின் ஊர்ந்து செல்கின்ற சக்கரம் போன்றது . ஆற்றின் பள்ளம் போன்ற இந்த முதுகுத் தண்டானது தேரின் அச்சு போல்வதாம். கொடிய மார்பகமானது ரதம் நடத்துபவன் நிற்கும் தட்டு ஆகும். இந்தத் தலை தினம் பூக்கின்ற தாமரை மொட்டு போல்வதாம் . நீண்ட தலை முடி தேரின் கொடியாம் . தினமும் நடத்துபவனினும் இத்தேரானது வேறாக இருப்பதைப் போல. நீ இவ்வுடம்பினைப் பார்.

### திருஷ்டாந்தம் கூறி இவ்வுடல் தானாக இயங்குவதில்லை எனல்

கடக்குஞ்ச ரம்பண்ணி உண்ணின் றொருத்தன்
கைபாத கன்னங்கள் மெய்போல் இயக்கும்
கிடக்கும் நடத்தா விடத்துஇவ் வுடம்பும்
கிடக்கும் ஒருத்தன் நடத்தா விடத்தே. (42)

**பதவுரை:** கடக் குஞ்சரம் பண்ணி = மத யானையைப் போன்று ஒரு உருவம் செய்து; உள் நின்று ஒருத்தன் = அதனுள்ளே ஒருவன் புகுந்து கொண்டு; கை பாத கன்னங்கள் மெய்போல் இயக்கும் = தும்பிக்கையை ஆட்டுவதும்,கால்களை அசைப்பதும்,காதுகளை ஆட்டுவதும் உண்மையே போலிருக்கும்; நடத்தா விடத்து கிடக்கும் = அவன் நடத்தாத போழ்து போட்டவாறே கிடக்கும்; இவ்வுடம்பும் கிடக்கும் ஒருத்தன் நடத்தா விடத்தே = அதைப்போலவே இந்த தூல உடம்பானது ஒருவன் இயக்காவிடத்து பிணம் போல கிடக்கும்.

**பொழிப்புரை:** மத யானையைப் போன்று ஒரு உருவம் செய்து அதனுள்ளே ஒருவன் புகுந்து கொண்டு தும்பிக்கையை ஆட்டுவதும், கால்களை அசைப்பதும்,காதுகளை ஆட்டுவதும் உண்மையே போலிருக்கும் .அவன் நடத்தாத போழ்து, போட்டவாறே கிடக்கும். அதைப்போலவே, இந்த தூல உடம்பானது ஒருவன் இயக்காவிடத்து பிணம் போல கிடக்கும்.



### தூல உடலின் அசுத்தம் கூறுதல்

ஒருகூறு மனமாகும் ஒருகூறு மலமாகும்
ஒருகூறு உடம்பாகும் உண்டற்ற அன்னம்
இருகூறு நீயாகில் ஒருகூறு நீயாம்
இழிக்கும் மலஞ்சோ ரிடப்பட்டது உடலே. (43)

**பதவுரை:** ஒரு கூறு மனமாகும் ஒரு கூறு மலமாகும் ஒரு கூறு உடம்பாகும் உண்டற்ற அன்னம் = உண்டு ஜீரணித்த உணவின் ஒரு பகுதி மனமாகவும், ஒரு பகுதி மலமாகவும்,ஒரு பகுதி உடம்பாகவும் மாறுகின்றது; இருகூறு நீயாகில் ஒரு கூறு நீயாம் = அதில் இரு பகுதியான மனமும், உடம்பும் நீ என்றிடில், மூன்றாவதான மலமும் நீ தான் ஆவாய் ; இழிக்கும் மலஞ் சோரிடப்பட்டது உடலே = அருவருப்பான மலம் ஒழுகிக் கொண்டிருக்கும் தன்மை உடையது இந்த தூல சரீரமாம்.

**பொழிப்புரை:** உண்டு ஜீரணித்த உணவின் ஒரு பகுதி மனமாகவும், ஒரு பகுதி மலமாகவும்,ஒரு பகுதி உடம்பாகவும் மாறுகின்றது .அதில் இரு பகுதியான மனமும், உடம்பும் நீ என்றிடில், மூன்றாவதான மலமும் நீ தான் ஆவாய். அருவருப்பான மலம் ஒழுகிக் கொண்டிருக்கும் தன்மை உடையதாம் இந்த தூல சரீரம்.

**விளக்கம்: ஒருகூறு மனமாகும் ஒரு கூறு மலமாகும் ஒரு கூறு உடம்பாகும் உண்டற்ற அன்னம்** என்பது: உண்ணப்படுகிற அன்னம் ஜடராக்கினியால் பக்குவப்பட்டு மூன்று விதமாக ஆகிறது. அதன் தூல அம்சம் மலமாகவும், மத்ய அம்சம் ரஸவத்தாக பரிணமித்து மாம்ஸமாகவும்,(அதாவது மாம்ஸத்துடன் சேர்ந்தும்),சூக்கும அம்சம் (ஸத்தாக இருக்கிற அம்சம்) மேல் போய் இருதயத்தை அடைந்து ஹிதம் என்ற பெயருள்ள நாடிகளுக்குள் பிரவேசித்து வாக்கு முதலிய கரணத்தை தொழில் செய்யும்படி செய்து கொண்டிருக்கின்ற மனஸ் ஆகிறது. (அதாவது மனஸை பலப்படுத்துகின்றது.) -த்வாதசோபநிஷத் , சாம வேதத்தின், சாந்தோக்யோபநிஷத், 6-ம் பிரபாடகம், கண்டம் 5-ல் ,1-வது பிரிவு.

### தூலதேகம் சடம் என்று கூறுதல்

கிளர் ஆதரத்துஉண்ணும் அன்னம் சுடக்கை
கிட்டப் பொறாதே இருந்தார் கிடந்தார்
தளராத உறுப்பொன்றும் உயிர்போக அன்றே
தழற்பள்ளி மீதே துயின்றார் சகித்தே (44)

**பதவுரை:** கிளர் ஆதரத்து உண்ணும் அன்னம் சுட = மிகவும் ஆசையோடு சாப்பிடுகின்ற உணவு கையைச் சுடுமாயின்; கை கிட்டப் பொறாதே இருந்தார் =

அவ்வுணவின் அருகில் கையை கொண்டு செல்ல இயலாது இருப்பார்கள்; கிடந்தார் தளராத உறுப்பொன்றும் உயிர்போக அன்றே = தனது உடல் உறுப்புகள் தளராமல் இருக்கக் கிடந்தவர்களாய் உயிரை விட்டு விட்ட நிலைமையில்; தழற்பள்ளி மீதே துயின்றார் சகித்தே = அக்கினி படுக்கையின் மேல் (சுடுகாட்டில்) பொறுமையாய்த் தூங்கினார்கள்.

**பொழிப்புரை:** மிகவும் ஆசையோடு சாப்பிடுகின்ற உணவு கையைச் சுடுமாயின் அவ்வுணவின் அருகில் கையைக் கொண்டு செல்ல இயலாது இருப்பார்கள். தனது உடல் உறுப்புகள் தளராமல் இருக்கக் கிடந்தவர்களாய் உயிரை விட்டு விட்ட நிலைமையில் அக்கினி படுக்கையின் மேல் (சுடுகாட்டில்) பொறுமையாய்த் தூங்குவர். (உணவின் சூட்டையே சகிக்க இயலாத இவ்வுடல் பிணமானவுடன் நெருப்பின் சூட்டைத் தாங்கிக் கொள்கிறது, சடமாவதால் என்பதாம்.)

### சர்வமும் தேகியினது செயலே எனல்

நிழற்பாவை கண்ணாடி யிற்பாவை கைகால்
நிமிர்க்கும் முடக்கும் இவன்செய்யும் எல்லாந்
தொழிற்பால வாம்மற்றுஇவ் வுடலஞ்செய் தொழிலும்
சுடர்ஞான வடிவான வன்செய்த தொழிலே. (45)

**பதவுரை:** நிழற் பாவை கண்ணாடியிற் பாவை = நிழல் உருவமும், கண்ணாடியில் பிரதிபிம்பித்த உருவமும்; கை கால் நிமிர்க்கும் முடக்கும்=கை, கால்களை நீட்டுதல், மடக்குதல் (போன்ற தொழில்களை) ; இவன் செய்யும் எல்லாம் தொழிற் பாலவாம் = இவன் செய்வது போலவே சகலத்தையும் செய்யும்; அற்று, இவ்வுடலஞ் செய்தொழிலும் = அதுபோலவே இத்தேகாதிகள் செய்யும் தொழில்களும்; சுடர் ஞான வடிவானவன் செய்த தொழிலே = சுயஞ் சோதி வடிவானவன் செய்கின்ற தொழிலாம் .

**பொழிப்புரை:** நிழல் உருவமும், கண்ணாடியில் பிரதிபிம்பித்த உருவமும், கை கால்களை நீட்டுதல், மடக்குதல் போன்ற தொழில்களை இவன் செய்வது போலவே, சகலத்தையும் செய்யும். அதுபோலவே இத்தேகாதிகள் செய்யும் தொழில்களும் சுயஞ் சோதி வடிவானவன் செய்கின்ற தொழிலாம் .

### தூல தேகம் நீயல்ல எனல்

அறிகின்ற பொருள்என்றும் அறிவானின் வேறே
யானால்இவ் வூனாரை நானென்ன லாமோ
செறிகின்ற புள்ளல்ல வேகூடுஇவ் வகையே
செடமான உடல்நின்னில் வேறென்று தெளியே. (46)



**பதவுரை:** அறிகின்ற பொருள் என்றும் அறிவானின் வேறேயானால் = அறியப்படுகின்ற பொருள்கள் யாவும் அவற்றை அறிபவனின்றும் வேறேயானால்; இவ் வூனாரை நான் என்னலாமோ = இத்தூல தேகத்தை நான் என்று சொல்லக் கூடுமோ ; செறிகின்ற புள் அல்லவே கூடு = (இத்தூல தேகமானது, கூண்டை) அடைகின்ற பறவை அல்ல. மற்று கூண்டு போன்றதே; இவ்வகையே செடமான உடல் நின்னில் வேறென்று தெளியே = இவ்விதத்திலேயே சடமான இவ்வுடலானது உன்னிலிருந்து அன்னியமானது என்று தெளிவாயாக.

**பொழிப்புரை:** அறியப்படுகின்ற பொருள்கள் யாவும் அவற்றை அறிபவனின்றும் வேறேயானால், இத்தூல தேகத்தை நான் என்று சொல்லக் கூடுமோ? இத்தூல தேகமானது, கூண்டை அடைகின்ற பறவை அல்ல. மற்று கூண்டு போன்றதேயாம். இவ்விதத்திலேயே சடமான இவ்வுடலானது உன்னிலிருந்து அன்னியமானது என்று தெளிவாயாக.

### இந்த தூல தேகம் ஐந்து பூதங்களின் பஞ்சீகரணம் என்றல்

நிலமாகும் வற்பென்றல் நெகிழ்கின்ற நீராம்
நெருப்பாம் இதில்சுட்ட எல்லாமும் அனிலஞ்
சலமான புரையான வான்இந்த உடலஞ்
சடமான ஐம்பூத உருவங்கள் தாமே. (47)

**பதவுரை:** நிலமாகும் வற்பு என்றல் = பூமி என்பது கடினமானது; நெகிழ்கின்ற நீராம் = இளகல் தனமையடையது நீராகும்;நெருப்பாம் இதில் சுட்ட எல்லாமும் = எவற்றையும் எரிப்பது அக்கினியாம் ; அனிலஞ் சலமான = எப்பொழுதும் சலித்தல் வாயுவாம் ; புரையான வான் =(இந்த நான்கிற்கும்) ஆதாரமானது ஆகாயமாம்; இந்த உடலம் சடமான ஐம்பூத உருவங்கள் தாமே = (எனவே) இந்த தூல தேகம் சடத்தன்மைகளையுடைய ஐந்து பூதங்களின் பஞ்சீகரணம்தானே.

**பொழிப்புரை:** பூமி என்பது கடினமானது. இளகல் தன்மையடையது நீராகும். எவற்றையும் எரிப்பது அக்கினியாம். எப்பொழுதும் சலித்தல் வாயுவாம் .இந்த நான்கிற்கும் ஆதாரமானது ஆகாயமாம். எனவே இந்த தூல தேகம் சடத்தன்மைகளையுடைய ஐந்து பூதங்களின் பஞ்சீகரணம்தானே.

### ஞானேந்திரியங்களும் நீயல்ல எனல்

விழியைப்பு மான்என்னில் ரவியாதி யாலே
விளக்கஞ்செயு(ம்)மற்ற உருவத்தை அற்றேல்
ஒழியப் படும்கன்ன முதல்நாலும் அவனன்று
உருக்கண்ட கண்தன்னை ஒப்பாக உள்ளே. (48)

**பதவுரை:** விழியைப் புமான் என்னில் = கண்களை ஆன்மா என்றிடில்; ரவியாதியாலே விளக்கஞ்செயு(ம்) மற்ற உருவத்தை = சூரியன் மற்றும் விளக்கின் துணை கொண்டே பிற உருவங்களை விளக்குவிக்கும்;அற்றேல் ஒழியப் படும் = அவ்வாறில்லாவிடின் ஏனைய பிற உருவங்கள் விளங்காது போகும்; கன்ன முதல் நாலும் அவனன்று = அவ்விதமே காது, மூக்கு, நாக்கு, தோல்(துவக்கு) முதலிய நான்கும் ஆத்மாவல்ல ; உருக்கண்ட கண் தன்னை ஒப்பாக உள்ளே = உருவங்களைப் பார்த்த கண்களுக்கு நிகராகக் கருதுவாயாக.

**பொழிப்புரை:** கண்களை ஆன்மா என்றிடில் சூரியன் மற்றும் விளக்கின் துணை கொண்டே பிற உருவங்களை விளக்குவிக்கும் . அவ்வாறில்லாவிடின் ஏனைய பிற உருவங்கள் விளங்காது போகும். அவ்விதமே காது, மூக்கு, நாக்கு,தோல்(துவக்கு) முதலிய நான்கும் ஆத்மாவல்ல . உருவங்களைப் பார்த்த கண்களுக்கு நிகராகக் கருதுவாயாக.

*அக்கினி மூன்று கூறாவதைக் கூறுதல்*

அழல்உண்பொருள் களில்உண்பவை முக்கூறதின் முற்கூறு
அணிஎன்பு நடுக்கூறது மச்சைக்கிட னாகும்
எழில்கொண்டக டைக்கூறது வாக்காயெழு மென்றே
இயல்நான்மறை அந்தங்கள் இசைக்கின்றன வாமே. (49)

**பதவுரை:** அழல் உண்பொருள்களில் உண்பவை முக்கூறு =ஜடராக்கினியால் உணவு பதார்த்தங்களின் சத்துக்கள் மூன்று பங்காம் ; அதில் முற்கூறு அணி என்பு = அதில் முதல் பகுதியாவது எலும்புகளாம் ; நடுக்கூறது மச்சைக்கு இடனாகும் =நடுப்பகுதியானது எலும்பிற்குள்ளிருக்கும் மாமிசமாம் ; எழில் கொண்ட கடைக்கூறது வாக்காய் எழும் = கடைசிப்பகுதியானது அழகுடைய வாக்காய் உருவாகும்; என்றே இயல் நான்மறை அந்தங்கள் இசைக்கின்ற -னவாமே = என்று மேன்மை பொருந்திய நான்கு வேதங்களும் முழங்குகின்றனவாம்.

**பொழிப்புரை:** ஜடராக்கினியால் உணவு பதார்த்தங்களின் சத்துக்கள் மூன்று பங்காம் ; அதில் முதல் பகுதி எலும்புகளாம். நடுப் பகுதியானது எலும்பிற்குள் -ளிருக்கும் மாமிசமாம். கடைசிப் பகுதியானது அழகுடைய வாக்காய் உருவாகும் என்று மேன்மை பொருந்திய நான்கு வேதங்களும் முழங்கு -கின்றனவாம்.

**விளக்கம்: அழல் உண்பொருள்களில் உண்பவை முக்கூறதின் முற்கூறு என்பு நடுக்கூறது மச்சைக்கிடனாகும் கடைக்கூறது வாக்காய் எழுமென்றே** என்பது: புசிக்கப்பட்ட தேஜஸ் (தைலம், நெய் முதலான அக்கினி சம்பந்தமான பொருட்கள்) ஜீரணமாகி, மூன்று விதமாகிறது. எப்படியென்றால் ஸ்தூலாம்சம்



எலும்பாகவும் (எலும்புடன் சேர்ந்தும்), மத்ய அம்சம் எலும்புக்குள்ளிருக்கிற மஜ்ஜையாகவும் (மஞ்சள் நிறமான வைர பாகம்) சூக்கும அம்சம் வாக்காகவும் (வாக்கிற்கு பேசும்படியான சாமார்த்தியத்தை உண்டு பண்ணுவதாகவும்) ஆகிறது. - **த்வாதசோபநிஷத்** ,சாம வேதத்தின், சாந்தோக்யோபநிஷத்,6-ம் பிரபாடகம், கண்டம் 5-ல் ,3- வது பிரிவு .

*நீர் மூன்று கூறாவதைக் கூறுதல்*

உண்ணும்புனல் முக்கூறுஅதின் முற்கூறுஉ வர்நீராம்
உதிரம்நடு விற்கூறு கடைக்கூறு பிராணன்
எண்ணும்இதில் இருகூறுஅவை நீயாயிடி னன்றோ
இறுகின்ற பிராணன்அது நீயாகுவது இசையே. (50)

**பதவுரை:** உண்ணும் புனல் முக்கூறு = (தாகம் நீங்கும் பொருட்டு) குடிக்கின்ற நீரும் மூன்று பகுதிகளாம் ;அதின் முற்கூறு உவர் நீராம் = அதில் முதல் பகுதி சிறு நீராம் ; உதிரம் நடுவிற் கூறு = இரத்தம் மத்திய பங்காம்; கடைக் கூறு பிராணன் = கடைசிப்பங்கு பிராண வாயு ; எண்ணும் இதில் இருகூறு அவை நீயாயிடில் அன்றோ = என்கின்ற இவற்றில் முதல் இரண்டு பகுதிகள் நீயானால் அல்லவா; இறுகின்ற பிராணன் அது நீயாகுவது இசையே = மூர்ச்சிக்கின்ற பிராணவாயுவையும் நீ என்று அழைக்கப்படலாம் . சொல்வாயாக.

**பொழிப்புரை:** (தாகம் நீங்கும் பொருட்டு ) குடிக்கின்ற நீரும் மூன்று பகுதிகளாம். அதில் முதல் பகுதி சிறு நீராகும். இரத்தம் மத்திய பங்காகும். கடைசிப் பங்கு பிராண வாயு என்கின்ற , இவற்றில் முதல் இரண்டு பகுதிகள் நீயானால் அல்லவா, மூர்ச்சிக்கின்ற பிராணவாயுவையும் நீ என்று அழைக்கப்படலாம் . சொல்வாயாக!

**விளக்கம்: உண்ணும் புனல் முக்கூறு அதின் முற்கூறு உவர் நீராம், உதிரம் நடுவிற் கூறு, கடைக்கூறு பிராணன்** என்பது: குடிக்கப்பட்ட ஜலம் . ஜீர்ணமாகி மூன்றுவிதமாக ஆகிறது. எப்படியென்றால் ஸ்தூல அம்சம் மூத்திரமாகவும், மத்ய அம்சம் ரத்தமாகவும் (ரத்தத்துடன் சேர்ந்தும்), சூக்கும அம்சம் பிராணனாகவும் (பிராணனை பலப்படுத்துவதாகவும்) ஆகிறது.- **த்வாதசோபநிஷத்,** சாம வேதத்தின், சாந்தோக்யோபநிஷத்,6-ம் பிரபாடகம், கண்டம் 5-ல் ,2-வதுபிரிவு .

*பிராணனும் நீ அல்ல என்பதற்கு உதாரணம் கூறுகிறார்*

பிராணனு மல்லதுஞ்சில் உணர்வின்மை யால்
அதுஉணரும் புலன்கள் ஒழிவால்
பிராணன்அது என்னைமன்னை ஒழியாது சேனை
நகர்சூழ் வலஞ்செய் பொழுதே. (51)

**பதவுரை:** துஞ்சில் உணர்வின்மையால் = தூக்கத்தில் நினைப்பது, அறிதல் போன்றவைகள் இல்லாமையினாலும்; அது உணரும் புலன்கள் ஒழிவால் = சகல விஷயங்களிலும் கூடுகின்ற இந்திரியங்கள் அனைத்தும் செயலற்றுப் போவதினாலும்; பிராணனுமல்ல = பிராணவாயுவும் நீ அல்லவாம் ; பிராணன் அது என்னை = (அப்படியாயின்) பிராணவாயு இயங்கிக் கொண்டிருப்பது எதனால் ; மன்னை ஒழியாது சேனை நகர் சூழ் வலஞ் செய்பொழுதே = மன்னவனை விட்டு நீங்காது பாதுகாக்கின்ற படை வீரர்கள், அவ்வரசன் நகர் வலம் வரும் சமயத்தில் அவனை விடாது பாதுகாத்தல் போலாம்.

**பொழிப்புரை:** தூக்கத்தில் நினைப்பது, அறிதல் போன்றவைகள் இல்லாமையினாலும், சகல விஷயங்களிலும் கூடுகின்ற இந்திரியங்கள் அனைத்தும் செயலற்றுப் போவதினாலும், பிராணவாயுவும் நீ அல்ல. அவ்வாறாயின், பிராணவாயு இயங்கிக் கொண்டிருப்பது எதனால் ? மன்னவனை விட்டு நீங்காது பாதுகாக்கின்ற படை வீரர்கள், அவ்வரசன் நகர் வலம் வரும் சமயத்தில் அவனை விடாது பாதுகாத்தல் போலவாம்.

### இதுவுமது

கரணம் ஒடுங்கவாயு நிகழ்வென்கொ லென்னில்
உடல்காவ லாகும் இலதேன்
மரண மடைந்ததென்று தமர்சுட் டிடாமுன்
வளைவாலின் ஞாளி கொளுமே. (52)

**பதவுரை:** கரணம் ஒடுங்க வாயு நிகழ்வென் கொல் என்னில் =அந்தக்கரணம் ஒடுங்கி இருக்கும் சமயங்களிலும் ,பிராணனின் சுவாசித்தல் முதலான தொழில்கள் நடைபெற்றுக் கொண்டிருப்பது எப்படி என்றால்; உடல் காவலாகும் = இத்தேகத்திற்கு பிராணவாயுவே காவலாளியாகும்; இலதேன் = இப்படிக் காவல் காக்காவிடின்; மரணமடைந்ததென்று = உயிர் பிரிந்தது என்று; தமர் சுட்டிடா முன் = உறவினர்கள் உடலை எரிக்கு முன்; வளை வாலின் ஞாளி கொளுமே = வளைந்த வாலையுடைய நாய் தின்றுவிடுமே.

**பொழிப்புரை:** அந்தக்கரணம் ஒடுங்கி இருக்கும் சமயங்களிலும் ,பிராணனின் சுவாசித்தல் முதலான தொழில்கள் நடைபெற்றுக் கொண்டிருப்பது எப்படி என்றால் இத்தேகத்திற்கு பிராணவாயுவே காவலாளியாகும். இப்படிக் காவல் காக்காவிடின் உயிர் பிரிந்தது என்று உறவினர்கள் உடலை எரிக்கு முன் வளைந்த வாலையுடைய நாய் உட்கொண்டு விடும்.






### மனமும், புத்தியும் நீயல்லவெனல்

இனமுற எண்ணவுள்ள கரணத்தில் ஒன்று
இதுஎனலால் இதுஎன்னது எனலான்
மன(ம்)முனம் அன்னமென்ற அதனாலும் அல்ல
மதியல்ல அந்த வகையே. (53)

**பதவுரை:** இனமுற எண்ணவுள்ள கரணத்தில் = மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்கின்ற அந்தக்கரணங்களில் ; ஒன்றுஇது எனலால் = இதுவும் ஒன்று என்பதனாலும்; இது என்னது எனலான் = இந்த மனம் என்னுடையது என்பதனாலும்; மனம் முனம் அன்னமென்ற அதனாலும் = முன்னர் மனம் அன்னத்தின் ஒரு பகுதி என்று கூறியிருக்கின்ற படியினாலும்; அல்ல; (ஆத்ம சொரூபமாய் இருக்கின்ற நீ மனமும்) அல்லவாம்; மதியல்ல அந்த வகையே = (கர்த்தாவான) புத்தியும் நீயல்ல அந்த முறையிலேயே.

**பொழிப்புரை:** மனம், புத்தி ,சித்தம், அகங்காரம் என்கின்ற அந்தக்கரணங்களில் இதுவும் ஒன்று என்பதனாலும், இந்த மனம் என்னுடையது என்பதனாலும், முன்னர் (43- வது பாடலில் கூறியவாறு ) மனம் அன்னத்தின் ஒரு பகுதி என்று கூறியிருக்கின்ற படியினாலும் ஆத்ம சொரூபமாய் இருக்கின்ற நீ மனமும் இல்லை. அந்த முறையிலேயே(கர்த்தாவான) புத்தியும் நீயல்ல.

### அகங்காரமும் நீயல்லவெனல்

இடர்இன் புளதாய் நிலையற்று அறிவற்று
எண்ணும்கர ணங்க விலாய்எவரும்
அடரும் பிறவிக்கு அடியென் றுணரும்
அகங்காரமும் நீயலஎன்று அறியே. (54)

**பதவுரை:** இடர் இன்புளதாய் = துன்பமும் இன்பமும் உள்ளதாய்; நிலையற்று அறிவற்று = நிச்சயமற்றதாய், தெளிவற்றதாய்; எண்ணும் கரணங்களிலாய் = உணர்வுடைய அந்தக்கரணத்தில் ஒன்றாய்; எவரும் = யாராயிருப்பினும்; அடரும் பிறவிக்கு அடியென்றுணரும் அகங்காரமும் = துன்பமான பிறவிக்கு ஆதாரமாம் என அறியத்தக்க அகங்காரமும்; நீய(ல்)ல என்று அறியே = நீயல்ல என்று தெரிந்து கொள்வாயாக.

**பொழிப்புரை:** துன்பமும் இன்பமும் உள்ளதாய், நிச்சயமற்றதாய், தெளிவற்றதாய், உணர்வுடைய அந்தக்கரணத்தில் ஒன்றாய், யாராயிருப்பினும் துன்பமான பிறவிக்கு ஆதாரமாம் என அறியத்தக்க அகங்காரமும் நீயல்ல என்று தெரிந்து கொள்வாயாக.

### சித்தமும் நீயல்ல என்று கூறல்

ஐயப் படலோர் பொருள்நிச் சயமாய்
அறியப்படல் யான்என தென்றுமதஞ்
செய்யப் படல்செய் வதுசிந் தனையாம்
சித்தம்அது வன்றென நீதெளியே. (55)

**பதவுரை:** ஐயப்படல் ஓர் பொருள் = ஒரு விஷயத்தில் சந்தேகப்படுவதும் ; நிச்சயமாய் அறியப்படல் = அவ்விஷயத்தில் நிச்சயப்படுவதும்; யான் எனதென்று மதஞ் செய்யப்படல் = யான் எனது என அகந்தையோடு விஷயங்களில் அபிமானம் கொள்ளப்படுவதும் (முதலானவற்றை ); செய்வது சிந்தனையாம் = தொழில் புரிவது எண்ணங்களாம் : சித்தம் அதுவன்றென நீ தெளியே = (சதா காலமும் சிந்தனையிலேயே இவ்வாறிருக்கின்ற) சித்தமும் நீயல்ல என்று அறிந்து கொள்வாய் .

**பொழிப்புரை:** ஒரு விஷயத்தில் சந்தேகப்படுவதும், அவ்விஷயத்தில் நிச்சயப்படுவதும், யான், எனது என அகந்தையோடு விஷயங்களில் அபிமானம் கொள்ளுவதும் முதலானவற்றை தொழில் புரிவது எண்ணங்களாம் . சதா காலமும் சிந்தனையிலேயே இவ்வாறிருக்கின்ற சித்தமும் நீயல்ல என்று அறிந்து கொள்வாய் .

### தூல சரீரமும், சூக்கும சரீரமும் நீயல்ல என்று முடிக்கின்றார்

முன்னாக உடம்பது சித்தமதே
முடிவாக மொழிந்த பொருள்திரள்தான்
நின்னாகில நீயறியும் பொருளாய்
நிகழ்கின்றத னாலென நின்மலனே. (56)

**பதவுரை:** முன் ஆக உடம்பது சித்தமதே முடிவாக = முன்னர் கூறிய தூலதேகம் முதல் சித்தம் வரையில் ; மொழிந்த பொருள்திரள்தான் = சொல்லப்பட்ட பொருள்களின் கூட்டமே தான்; நீ யறியும் பொருளாய்= உன்னால் அறியப்படும் பொருட்களாக; நிகழ்கின்றதனால் = விளங்குகின்றதனால் ; நின்னாகில = (அவைகள்)உனது யதார்த்த ரூபமல்ல ; என நின்மலனே = என்றார் மலமற்ற குருநாதர்.

**பொழிப்புரை:** முன்னர் கூறிய தூலதேகம் முதல் சித்தம் வரையில் சொல்லப்பட்ட பொருள்களின் கூட்டமே தான், உன்னால் அறியப்படும் பொருட்களாக விளங்குகின்றதனால், அவைகள் உனது யதார்த்த ரூபமல்ல என்றார் மலமற்ற குருநாதர்.



### அவதாரிகை

அப்படியானால் நான் யார் என்று சீடன் கேட்பதும், நீ மாயையுமல்ல, பிரபஞ்சமுமல்ல என்றும்,ஞானக் கண் விழிப்பின், சர்வத்தையும் அறிகின்ற அறிபொருளாய் இருக்கின்ற தத்துவமசி மகாவாக்கியம் கூறுகின்ற அசிபதப் பொருளாம் என பாடல் **57 முதல் 60** வரையில் கூறுகிறார்.

### நான் என்பது அறிய இயலாத பொருளா என சீடன் வினாவுதல்

உன்னால் அறியப் படும்யா வையும்உன்
உருவன்றென ஓதினை ஒக்குமெனக்கு
என்னால் அறியா தொழியும் பொருளோ
யானாகுவது என்றனன் என்றலுமே. (57)

**பதவுரை:** உன்னால் அறியப்படும் யாவையும் = உன்னால் அறியப்படுகின்ற அனைத்தும் ; உன் உரு அன்றென ஓதினை = உனது சொரூபம் இல்லை என்று உபதேசித்தீர்கள்; ஒக்கும் எனக்கு =அதில் என் புத்தி ஒத்துப் போகின்றது; என்னால் அறியாதொழியும் பொருளோ யானாகுவது என்றனன் = என்னால் அறியப்பட முடியாமல் மறைந்திருக்கின்ற சூன்யமாகிய காரணசரீரமோ நானாக இருப்பது என்று சீடன் கேட்டான்; என்றலுமே = கேட்டதுமே;

**பொழிப்புரை:** உன்னால் அறியப்படுகின்ற அனைத்தும் , உனது சொரூபம் இல்லை என்று உபதேசித்தீர்கள். அதில் என் புத்தி ஒத்துப் போகின்றது. அப்படியானால், என்னால் அறியப்பட முடியாமல் மறைந்திருக்கின்ற சூன்யமாகிய காரண சரீரமோ நானாக இருப்பது ? என்று சீடன் கேட்டதுமே குரு கூறத் தொடங்குகிறார் .

### மாயை காரணமும் உலகம் காரியமுமாம் எனல்

அறியாப்பொருள் காரண மாயைகுறித்து
அறியும்பொருள் காரிய மாம்உலகுஇந்
நெறியால்திகழ் நான்மறை அந்தமெலா
நீயன்றென ஓது(ம்) நிரந்தரமே. (58)

**பதவுரை:** அறியாப் பொருள் காரண மாயை = அறிபடாப்பொருள், காரணமாகிய மாயையாம்; குறித்து அறியும் பொருள் காரியமாம் உலகு = சுட்டி அறிபடும் பொருள், காரியமான இந்த உலகமாம்; இந்நெறியால் திகழ் நான்மறை அந்தமெலாம் = இந்த வழியால் விளங்குகின்ற நான்கு வேதங்களின் முடிவான கருத்து எல்லாம்; நீயன்றென ஓதும் நிரந்தரமே= அறிபடாப்பொருளான மாயையும்,அறிபடும் பொருளான உலகமும் நீ அல்ல என்று இடைவிடாது ஓதுகின்றன.

**பொழிப்புரை:** அறிபடாப்பொருள், காரணமாகிய மாயையாம். சுட்டி அறிபடும் பொருள் காரியமான இந்த உலகமாம். இந்த வழியால் விளங்குகின்ற நான்கு வேதங்களின் முடிவாயிருக்கின்ற மஹா வாக்கியங்கள் எல்லாம் அறிபடாப் பொருளான மாயையும், அறிபடும் பொருளான உலகமும் நீ அல்ல என்று இடைவிடாது ஓதுகின்றன .

**விளக்கம்:** மாயை உலகிற்கு உபாதானக் காரணமாகும். மாயையை உபாதியாகவுடைய ஈஸ்வரனால் உலகம் அனைத்தும் நிறைந்ததாய் இருக்கும். இந்த உலகம் தோன்றுகிறதால் அசத்து அன்று. ஞான நோக்கினால் பாதிக்கப்படுவதால் சத்தும் அன்று. அநிர்வாச்சியமாம் (வாக்கியத்திற்கு எட்டாதது. வாக்கிய விருத்தியால் மட்டுமே எட்டும்). சுருதி, யுக்தியோடு, ஞானத்தினால் மாயையானது நிலையற்றது. இந்த உலகத்திற்கு பொய்யையும் உண்மையையும் தோற்றுவிப்பது. சிதாபாச ரூபத்தால் சீவேஸ்வரர்களை உண்டாக்கும். அழியும் இந்த உலகம் அனைத்தையும் உண்டாக்கும். கூடாததை கூட்டுவிக்கும் தன்மை இயல்பாகவே பொருந்தியுள்ளது. மாயையை அறியும் வரை ஆச்சரியம் தோன்றும். அறிந்த பின்னால் மித்தை என ஒழியும்.

- **ஸ்ரீபஞ்சதசி-சித்திர தீபம்**

அறிபொருள் நீ எனல்

அறியும் பொருளன்று அறியாப் பொருளன்று
அறிவாகிய நீயெனும் அப்பொருள்தான்
பொறியின் வழிநின் றறியும் பொருளோ
போதக் கண்விழித் தறியும் பொருளே. (59)

**பதவுரை:** அறியும் பொருளன்று = அறிபடும் பொருள் நீ யல்ல ; அறியாப் பொருளன்று = அறிபடாப் பொருளும் நீ அல்ல: அறிவாகிய நீயெனும் அப்பொருள்தான் = அறிபொருளாய் இருக்கின்ற நீ என்னும் அந்த பூரண சச்சிதானந்த துரியப் பொருள் தான்; பொறியின் வழி நின்றறியும் பொருளோ = ஐந்து பொறிகள் வழி சென்று அறியப்படுகின்ற வத்துவோ (அல்ல); போதக் கண் விழித்தறியும் பொருளே = அறிவுக் கண் திறந்து தான் தானாக காணும் பரம்பொருளாம் நீ (பரிபூரண சச்சிதானந்த பிரம்ம சொரூபம் என்பதாம்)

**பொழிப்புரை:** அறிபடும் பொருள் நீ யல்ல . அறிபடாப் பொருளும் நீ அல்ல. அறிபொருளாகிய நீ , அந்த பூரண சச்சிதானந்த துரியப் பொருளேயன்றி, ஐம்பொறிகள் வழி சென்று அறியப்படுகின்ற வத்து அல்ல. அறிவுக் கண் திறந்து தான் தானாக காணும் பரம்பொருளாம் நீ (பரிபூரண சச்சிதானந்த பிரம்ம சொரூபம் என்பதாம்).



**விளக்கம்: அறியும் பொருளன்று அறியாப் பொருளன்று** என்பதற்கு: **அறிபடும் பொருள் நீயல்லை அறிபடாப்பொருள் நீயல்லை அறி -பொருவாகும் உன்னை அனுபவித்து அறிவாய் நீயே** (காரிய நாம ரூபங்களான உலகமும். அவாச்சிய வடிவான மாயையும் நீ இல்லை.காரண ஞான அறிபொருளாய்-சர்வத்தையும் சுவானுபவமாய் அறிகின்ற பொருளே நீ) என்றும், **அது இது இரண்டும் ஆகா, அகம் பொருள் அறிவாய் நீயே** (உபாதானக் காரணமான மாயையும், அதன் காரியமான இந்த உலகமும் ஆகாமல் பிரத்தியகான்மாவாய் இருக்கின்ற உன்னை அறிவாய் நீயே) என்றும்,

**பொறியின் வழி நின்றறியும் பொருளோ** என்பதற்கு: **எல்லாம் கண்டறியும் என்னை ஏது கொண்டு அறிவேன் என்று சொல்லாதே, சுயமாஞ் சோதி சுடருக்கு சுடர் வேறுண்டோ ?** (மூன்று சரீரங்களையும், மூன்று அவஸ்தைகளையும், முக்காலங்களையும் அறிகின்ற என்னை எதனைக் கொண்டு அறிவேன் என்று கேட்காதே. சுயமாய் ஒளிர்கின்ற சூரியனைக் காண வேறு ஒரு சூரியன் தேவையா? இல்லையே !) என்றும் - **கைவல்யம்** கூறுகிறது.

**அறிவாகிய நீயெனும் அப்பொருள்தான் என்பது:** நனவில் பொறி புலன்களின் சேட்டையையும்,கனவில் மனதின் கூத்தையும்,சுழுத்தியில் சூன்யத்தையும் காண்கின்றவனாயும் ,தூல சூக்கும காரண சரீரங்களும், நனவு,கனவு,தூக்க அவஸ்தைகளும்,இறந்த காலம்,நிகழ்காலம்,வருங்காலம் முதலான கால தேச வர்த்தமானங்களும் சனன மரண சம்சாரக் கடலில் எழுந்து மறைகின்ற அலைகளான அவைக்கெல்லாம் சாட்சியாய் இருப்பவனாயும் நீ விளங்குகின்றாய் என்பது.

வேத மகா வாக்கியங்களே முடிவானது எனல்

வேதப்பொருள் தான்இது வேறுசொலும்
வினையாவையு மன்றுஒரு வேறுமிலாப்
போதப்பொருள் அந்த மறைக்குஅணியாம்
புனிதப்பொருள் தத்தொ மசிப்பொருளே. (60)

**பதவுரை:** வேதப்பொருள் தான் இது = வேதங்கள் முடிவாகச் சொல்கின்ற அர்த்தம் இதுவே ; ஏறு = கடைப்பிடிப்பாய்; சொலும் வினை யாவையும் அன்று = சொல்லப்படுகின்ற கர்மங்கள் எவையும் அல்லவாம்; ஒரு வேறுமிலாப் போதப் பொருள்= பேதமில்லா ஞானப் பொருள் ;அந்த மறைக்கு அணியாம் = இந்த நான்கு வேதங்களுக்கும் அணிகலன்களாம்; புனிதப் பொருள் தத்தொமசிப் பொருளே =பரிசுத்தமான அவ்வஸ்து சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தின் தத்தவமசிப் பொருளாம்.

**பொழிப்புரை :** வேதங்கள் முடிவாகச் சொல்கின்ற அர்த்தம் இதுவே; கடைப்பிடிப்பாய். சொல்லப்படுகின்ற கர்மங்கள் எவையும் அல்லவாம். பேதமில்லா ஞானப் பொருள் இந்த நான்கு வேதங்களுக்கும் அணிகலன்களாம். பரிசுத்தமான அவ்வஸ்து சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தின் தத்துவமசிப் பொருளாம்.

## அவதாரிகை

தத்,துவம் என்னும் பதங்களின் ஐக்கியமே அசிபதத்தின் பொருளென குரு கூறவும்,அந்த ஐக்கியம் பெறும் வழியை உரைக்குமாறு சீடன் வேண்ட, காரண உபாதியையும்,காரிய உபாதியையும் முதலில் நீக்க வேண்டும் என்றும், அதற்கு அசுத்தங்களிலிருந்து மீண்டு, சுத்தமாக வேண்டும் என்றும், அதாவது வாச்சியார்த்தத்தை விட்டு இலட்சியார்த்த பொருளைக் கொள்ள வேண்டும் என்றும், மூவித இலக்கணைகளில் விட்டுவிடாத இலக்கணை மூலமாக பொருள் கொண்டு சீவனது காரிய உபாதிகளான ஏழையும்,ஈஸ்வரனின் காரண உபாதிகளான ஏழையும் நீக்கிவிட,சீவ பிரம்ம ஐக்கியம் கிடைக்கும் என்றும் குரு போதிப்பதை **61-வது முதல் 76**-வரையிலான பாடல்களில் கூறுகிறார்.

### *தத்துவமசி மகா வாக்கியத்தைக் கூறல்*

நிமலமாம்பர மதுவெ னும்பொருள் நீஎனும்பொருள் சீவனே
அமலமான இரண்டி னயிக்கியம் அசிபதப்பொரு ளாவதே. (61)

**பதவுரை:** நிமலமாம் பரம் அது எனும் பொருள் = நின்மலமான பிரம்மமே தத் எனும் முதல் பதத்தின் அது என்பதன் பொருளாம்; நீ எனும் பொருள் சீவனே = துவம் என்னும் இரண்டாம் பதமான நீ என்பதன் பொருள் (சிதாபாசனற்ற) சீவனாம்; அமலமான இரண்டின் அயிக்கியம் = களங்கமற்ற பிரம்ம (சிதாபாசத்தன்மை நீங்கிய) கூடத்த ஐக்கியமே; அசிபதப் பொருளாவதே = மூன்றாவது பதமான அசி என்பதன் பொருளாம்.

**பொழிப்புரை:** நின்மலமான பிரம்மமே தத் எனும் முதல் பதத்தின் அது என்பதன் பொருளாகும் .துவம் என்னும் இரண்டாம் பதமான நீ என்பதன் பொருள் சிதாபாசனற்ற சீவனாகும். களங்கமற்ற பிரம்மம், சிதாபாசத்தன்மை நீங்கிய கூடத்தன் ஆகிய இரண்டின் ஐக்கியமே மூன்றாவது பதமான அசி என்பதன் பொருளாகும்.

**ஸ்ரீபஞ்சதசி** கூறுவது: ஆகாசாதி உண்டாவதற்கு முன்னர் **ஏகம் ஏவ அத்துவிதியம்**- சஜாதீய, விஜாதீய, சுவகத பேதமின்றியதும், நாமரூபமின்றி -யதுமான ஸத் வஸ்து ஒன்றே உளது என்று **சாம வேதத்தில்** சொல்லப்பட் -டுள்ளது. சிருஷ்டிக்குப் பின்னரும் இவ்வஸ்துவிற்கு விசார நோக்கினால் சஜாதீய, விஜாதீய, சுவகத பேதமின்றியதும், நாமரூபமின்றியதுமான ஸத்தையே தத் எனும் பதத்தின் இலட்சணையால் சொல்லப்படுகிறது.



**சஜாதீய பேதம்:** பிராம்மணனுக்கு .அன்னிய பிராம்மணனோடுள்ள இனத்தாலாகிய பேதம். **விஜாதீய பேதம்:**பிராம்மணனுக்கு, சூத்திரர் முதலியோர்களோடுள்ள வேற்றினத்தாலாகிய பேதம். **சுவகத பேதம்:** பிராம்மணனுக்கு தனது கை,கால் முதலிய அவயவங்களோடுள்ள பேதம்.

சிரவண மனனங்களால், அறிபவனது தேகேந்திரியங்களுக்கு வேறாய் பொருந்தியிருக்கும் ஸத் வஸ்துவே துவம் பதத்தின் இலட்சணையால் சொல்லப்படுகிறது.

அசி எனும் பதம் நிலையான நல்ல ஐக்கியத்தைத் தெரிவிக்கும். துவம்,தத் பதங்களின் பிரமாணத்தால் சித்தித்த ஐக்கியம் சீடர்களால் அனுபவிக்கத்தக்கது.

### *பிரம்ம கூடத்த ஐக்கியத்தை அடையும் வகையை வினாவுதல்*

அருமை யாகிய பிரம(ம்) முன்னிலை யாகும் ஆருயிர் பின்னிலை
இருமை யான இரண்டின் அயிக்கம் எய்து மாறுஎ(வ்)வன் என்னவே. (62)

**பதவுரை:** அருமையாகிய பிரமம் முன்னிலையாகும் = அரியதான பிரம்மமானது முதல் நிலையில் உள்ளதாகும்; ஆருயிர் பின்னிலை = பிரியமான சீவன் பின்புள நிலையாகும்; இருமையான இரண்டின் அயிக்கம் = துவிதமாய் இருக்கின்ற இவ்விரண்டினது ஐக்கியம்; எய்துமாறு எ(வ்)வன் என்னவே =பெறுவது எவ்விதம் என வினவினான்.

**பொழிப்புரை:** அரியதான பிரம்மமானது முதல் நிலையில் உள்ளதாகும். பிரியமான சீவன் பின்புள நிலையாகும். துவிதமாய் வெவ்வேறு பொருளாய் இருக்கின்ற இவ்விரண்டினது ஐக்கியம் பெறுவது எவ்வண்ணம்? என வினவினான்.

**விளக்கம்: பிரமம் முன்னிலை யாகும்** என்பது: 36-வது தத்துவமான பிரம்மம் சுத்தமானது.இதில் கிளிஞ்சலில் வெள்ளி போல தோன்றிய மூலப்பிரகிருதியில் முதல் குணமான சத்துவ குண மாயையில் பிரதிபிம்பித்த பிரம்ம சைதன்யமே ஈஸ்வரன். **சுத்தமாம் சத்துவமே உண்மையாகும்** என்றபடி, ஈஸ்வரனே முன்னிலையாகிறான். தூல சூக்கும தத்துவங்கள் இருபத்தாறோடும் கூடியுள்ளது சீவன். இரண்டாவதான இராசத குணமான அவித்தையில்(அசுத்த மாயையில்) பிரதிபிம்பித்த பிரம்ம சைதன்யமே சிதாபாசனான சீவன். **நாசமாம் உயிர்க்கு அப்போது நாமமும் பிராஞ்ஞனாமே** (சீவனாமே) என்றபடி சிதாபாச சீவன் பின்னிலையாகிறான். எனவே ஈஸ்வரனுக்கும், சீவனுக்கும் ஐக்கியம் கூடும் என்று கூறுவது எங்ஙனம்? என்பதே சீடனது கேள்வியாம்.

### உபாதியால் சீவேசுர பேதமாம் எனல்

உபாதி யால்வரு பேத மேஇவர் பேதம் ஒன்றுறும் உயிரினின்
கபாதி யாம்உடல் போல் இறைக்குள கார ணாதிகள் காயமே. (63)

**பதவுரை:** உபாதியால் வரு பேதமே இவர் பேதம் = காரண உபாதியாயும், காரிய உபாதியாயும் இருக்கும் பேதங்களே ஈஸ்வரனுக்கும் சீவனுக்கும் உள்ள பேதமாகும்; உயிரினின் ஒன்றுறும் கபாதியாம் உடல் போல் = சீவனோடு ஒன்றுபடும், கபம், பித்தம், வாதம் முதலியவற்றால் கோழை, சளி போன்ற நவ துவார அசுத்தங்களோடுள்ள ஏழும், தேகமானது போல; இறைக்குள காரணாதிகள் காயமே = ஈஸ்வரனுக்கும் சகல காரணன் முதலான ஏழும் தேகங்களாம்.

**பொழிப்புரை:** காரண உபாதியாயும், காரிய உபாதியாயும் இருக்கும் பேதங்களே ஈஸ்வரனுக்கும் சீவனுக்கும் உள்ள பேதமாகும். சீவனோடு ஒன்றுபடுகின்ற- கபம், பித்தம், வாதம் முதலியவற்றால் கோழை, சளி போன்ற நவ துவார அசுத்தங்களோடுள்ள - ஏழும் மூன்று சரீரங்களானது போல, ஈஸ்வரனுக்கும் சகல காரணன் முதலான ஏழும் முச்சரீரங்களாம்.

**விளக்கம்: உபாதி** என்பது: எந்த பொருள் எந்த இடத்தில் தானிருக்கிறதோ அந்த இடத்திலுள்ள வேறொரு பொருளை அறிவித்துக் கொண்டு தான் வேறாய் இருக்கின்றதோ அது உபாதி எனப்படும். உதாரணமாக, அந்தக்கரணம் எவ்வளவிடத்தில் தானிருக்கிறதோ அவ்வளவு இடத்திலிருக்கும் சைதன்னியத்தை சாட்சி என்னும் பெயரால் அறிவித்துத் தான் வேறாயிருப்பது போலவாம் - **விசார சாகரம்**

ஈசனுக்கு காரண உபாதியாயிருப்பது மாயை. இது சமட்டி வடிவமாகும். பொதுவானது. சீவனுக்கு அவித்தை உபாதியாகும். இது வியட்டி வடிவமாகும். தனித்தனியாய் அவரவர்க்கானது. வியட்டி=ஒருமை; சமட்டி= பன்மை. விசுவன், தைஜசன், பிராஞ்ஞன் சீவனது தூல, சூக்கும, காரண தேக வியட்டி வடிவம்; விராட்டு, இரண்ணியகர்ப்பன், அந்தரியாமி ஈஸ்வரனது சமட்டி வடிவம். ஒருமையில் உள்ள சராசரப்பொருள்கள் எல்லாம் சீவனாகவும் அதாவது வியட்டியாகவும், அவைகள் அனைத்தையும் ஒன்றாகச் சேர்த்தது எல்லாம் ஈஸ்வரனாகவும் அதாவது சமட்டியாகவும் உள்ள இதுவே சீவேஸ்வர பேதத்திற்கு முக்கியக் காரணமாம். - கைவல்யம். தத்துவ விளக்கப்படலம் 36&37-ம் பாடல்களுக்கு யாம் எழுதிய விளக்க உரையிலிருந்து

### ஈஸ்வரனின் ஏழு உபாதிகளையும் கூறுதல்

ஈசன் முற்றறி வான்வி யாபி எவைக்கும் ஏது வியம்புமா
காச கன்நிரு பாதி பாவனை கார ணாதிக ளாவதே. (64)



**பதவுரை:** ஈசன் = எவற்றினும் மேலானவன்; முற்றறிவான் = சர்வஞ்ஞன்; வியாபி = அந்தரியாமி ; எவைக்கும் ஏது = சர்வ காரணன்; இயம்பும் ஆகாசகன் = சர்வமும் காப்பவன்; நிருபாதி = சர்வத்தின் சங்காரகன்; பாவனை = சர்வ சிருஷ்டி கர்த்தா; காரணாதிகளாவதே= (ஈஸ்வரனது) காரண உபாதிகளாம்.

**பொழிப்புரை:** (1)எவற்றினும் மேலானவன், (2)சர்வமும் அறிபவன், (3)எங்கும் நிறைந்துள்ளவன், (4)அனைத்திற்கும் காரணமானவன், (5)சர்வமும் காப்பவன் (விஷ்ணு); (6)சர்வத்தின் சங்காரகன்(ருத்திரன்); (7)சர்வ சிருஷ்டி கர்த்தா (பிரம்மா) என்கின்ற இந்த ஏழும் ஈஸ்வரனது காரண உபாதிகளாம்.

### சுத்த அசுத்தங்களைக் கூற ஆரம்பிக்கிறார்

நீதி யாலிரு பாதி நீங்கிட நீஎனச் சொல் பதத்தினும்
ஆதி யாகிய தற்ப தத்தும் அசுத்த சுத்தம் உரைத்துமே. (65)

**பதவுரை:** நீதியால் இருபாதி நீங்கிட =வேதங்கள் கூறிய ஒழுங்குபடி காரண காரிய உபாதிகள் நீங்கிட ; நீ எனச் சொல் பதத்தினும் = நீ எனச் சொல்லப்படும் துவம் பதத்திலும்; ஆதியாகிய தத் பதத்தும் =முதலாக இருக்கின்ற தத்பதத்திலும் உள்ள ; அசுத்த(ம்) சுத்தம் உரைத்துமே= அசுத்தத்தையும் சுத்தத்தையும் சொல்கிறேன்.

**பொழிப்புரை:** வேதங்கள் கூறிய ஒழுங்குபடி காரண காரிய உபாதிகள் நீங்கிட, நீ எனச் சொல்லப்படும் துவம் பதத்திலும், முதலாக இருக்கின்ற தத் பதத்திலும் உள்ள அசுத்தத்தையும் சுத்தத்தையும் சொல்கிறேன்.

### துவம் பதத்தின் அசுத்த சுத்தங்களைக் கூறுதல்

ஆக முன்திகழ் ஏழு நானெனல் தொம்ப தத்தி னசுத்தமே
சோக மின்றிய சான்று நானெனல் தொம்ப தப்பொருள் சுத்தமே. (66)

**பதவுரை:** ஆக முன்திகழ் ஏழு(ம்) நானெனல்=தூல தேகம் முதற்கொண்டு விளங்குகின்ற ஏழையும் நான் எனச் சொல்லுதல்; தொம் பதத்தின் அசுத்தமே =துவம் பதத்தின் அசுத்தமாம்; சோகமின்றிய சான்று நானெனல் = ஆனந்த சொரூபமான சாட்சி நான் எனல்; தொம் பதப் பொருள் சுத்தமே= துவம் பதத்தின் சுத்தமான பொருளாம்.

**பொழிப்புரை:** தூல தேகம் முதற்கொண்டு விளங்குகின்ற ஏழையும் நான் எனச் சொல்லுதல் துவம் பதத்தின் அசுத்தமாம். ஆனந்த சொரூபமான சாட்சி நான் எனல் , துவம் பதத்தின் சுத்தமான பொருளாம்.

**விளக்கம்:** பாடல்கள் 40-முதல் 55-வரையிலுள்ள ஏழும் நீயல்ல என்றது அசுத்தமானது. 57-முதல் 60-வரையில் சகலத்தையும் அறிகின்ற பொருளாய் இருக்கின்றவனே நீ என்றது சுத்தமானது.

அவித்தைக்கு, ஆதாரமான மூலத்தை மறைப்பதும், சீவனுக்கு வருணாசிரமங்களும், சூக்கும தேகத்திற்கு காமக் குரோதாதிகளும், தூல தேகத்திற்கு மலம் ஒன்பது வாயிலிலும் ஒழுகிக்கொண்டிருப்பதும் தொம்பதத்தின் அசுத்தங்களாகும். மூன்று அவஸ்தைகளுக்கும் சாட்சியாக இருக்கின்ற நானே தொம்பதத்தின் சுத்தமாகும் என்பது.

### தத் பதத்தின் அசுத்த சுத்தங்களைக் கூ றுதல்

அகில காரண மாதி நானெனல் தற்ப தத்தின் அசுத்தமே
சகல காரண சான்று நானெனல் தற்ப தப்பொருள் சுத்தமே. (67)

**பதவுரை:** அகில காரணமாதி நானெனல் = சர்வஞ்ஞன், சர்வ சக்திமான், சர்வ காரணன், சர்வமும் நிறைந்துள்ளவன், சர்வமும் காப்பவன், சர்வத்தின் சங்காரகன், சர்வ சிருஷ்டி கர்த்தா என்கின்ற இந்த ஏழும் நான் என்பது ; தத் பதத்தின் அசுத்தமே = தத் பதத்தின் அசுத்தமாம் ; சகல காரண சான்று நானெனல் = சர்வ காரணாதி ஏழிற்கும் ஆதாரம் நான் என்பது ; தத் பதப்பொருள் சுத்தமே = தத் என்னும் பதத்திற்கு சுத்தமான பொருளாம்.

**பொழிப்புரை:** சர்வஞ்ஞன், சர்வ சக்திமான், சர்வ காரணன், சர்வமும் நிறைந்துள்ளவன், சர்வமும் காப்பவன், சர்வத்தின் சங்காரகன், சர்வ சிருஷ்டி கர்த்தா என்கின்ற இந்த ஏழும் நான் என்னும் தத் பதத்தின் அசுத்தமாம். சர்வ காரணாதி ஏழிற்கும் ஆதாரம் நான் என்பது தத் என்னும் பதத்திற்கு சுத்தமான பொருளாம்.

### அசி பதத்தின் பொருள் கூறுதல்

செறிந்த காரண காரி யங்கள் சிதைந்து மேலுறு சித்ததா
யறிந்த வாதனை தானு மற்றதவ் வசிப தப்பொரு ளாவதே. (68)

**பதவுரை:** செறிந்த காரண காரியங்கள் = பொருந்திய ஈஸ்வரனின் காரண உபாதியும், சீவனது காரிய உபாதியும் ; சிதைந்து = அழிந்து; மேலுறு சித்ததாய் = மேன்மை பொருந்திய பிரம்ம சொரூபமாய்; அறிந்த வாதனை தானு மற்றது = கூடத்தனாய் அறியப்பட்ட நிலையுமற்றது ; அவ்வசி பதப் பொருளாவதே = ஐக்கியம் எனும் அந்த அசிபதத்தின் பொருளாகும்;

**பொழிப்புரை:** பொருந்திய ஈஸ்வரனின் காரண உபாதியும், சீவனது காரிய உபாதியும் அழிந்து, மேன்மை பொருந்திய பிரம்ம சொரூபமாய், கூடத்தனாய் அறியப்பட்ட நிலையுமற்றதாய் இருக்கின்ற ஐக்கியமே அந்த அசிபதத்தின் பொருளாகும்;



**விளக்கம்:** ஈஸ்வர, சீவ தர்மங்களோடு உபாதியையும் விட்டு இவற்றின் சேதன பாகத்தை விடாமல் கொள்வதே பிரம்ம கூடத்த ஏக நிலையான ஐக்கியமாம். இதுவே அசிபதத்தின் பொருளாம்.

### மகா வாக்கியத்தின் வாச்சியார்த்தம் இலட்சியார்த்தம் கூறல்

அசுத்த மாகிய திருப தத்தினு முக்கி யப்பொரு ளாவதே
விசுத்த மான திலக்கி யப்பொருள் என்று சொல்லுவர் விமலரே. (69)

**பதவுரை:** அசுத்தமாகிய(து) இரு பதத்தினும் முக்கியப் பொருளாவதே = அசுத்தம் எனப்படுவது தத், துவம் எனும் இரண்டுபதங்களின் வாச்சியார்த்தமாம். அதாவது முக்கிய அர்த்தமாம்; விசுத்த மான(து) இலக்கியப் பொருள் = விசுத்தம் எனப்படுவது இவ்விரண்டு பதங்களின் இலட்சியார்த்தமாம் ; என்று சொல்லுவர் விமலரே = என அறிஞர் பெருமக்கள் கூறுவர்.

**பொழிப்புரை:** அசுத்தம் எனப்படுவது தத், துவம் எனும் இரண்டு பதங்களின் வாச்சியார்த்தமாம். அதாவது முக்கிய அர்த்தமாம். விசுத்தம் எனப்படுவது இவ்விரண்டு பதங்களின் இலட்சியார்த்தமாம் என அறிஞர் பெருமக்கள் கூறுவர்.

**விளக்கம்:** வாக்கியங்களை அறிவது என்பது அவற்றின் அர்த்தத்தில் உள்ளதாகும். வாக்கியங்களுக்கு அதன் அர்த்தத்தோடு உள்ள தொடர்பே விருத்தி எனப்படும். இது சக்தி விருத்தி, இலட்சணா விருத்தி என இரண்டு வகையாகும். சொற்களின்(பதங்களின்)நேர் பொருளை அறிதல் சக்தி விருத்தி. குடம் என்னும் சொல் அக்குடத்தைப் பற்றிய அறிவை உண்டாக்கும். இச்சக்தி விருத்தியையே வாச்சியார்த்தம் என்று கூறுவர். வாச்சியார்த்தத்தோடு தொடர்புடைய இலட்சணாவிருத்தியே இலக்கியார்த்தம் எனப்படும்.

### இதுவுமது

முரண்ட சீவ பரங்கள் தம்முடன் முக்கி யப்பொரு ளாவதே
இரண்டில் வேறு சிற்சொ ரூபம் இலக்கி யப்பொரு ளாவதே. (70)

**பதவுரை:** முரண்ட சீவ பரங்கள் தம்முடன் முக்கியப் பொருளாவதே = காரண, காரிய உபாதியால் ஒருவருக்கொருவர் முரண்பட்ட (பேதப்பட்ட) சீவேஸ்வரர்கள், வாச்சியார்த்தமாம். இரண்டில் வேறு அறு சிற்சொரூபம் இலக்கியப்பொருளாவதே = இந்த சீவேஸ்வரர்களின் பேதமற்ற சேதன பாகங்களான கூடத்த பிரம்ம சொரூபமே இலட்சியார்த்தமாம்.

**பொழிப்புரை:** காரண, காரிய உபாதியால் ஒருவருக்கொருவர் முரண்பட்ட (பேதப்பட்ட) சீவேஸ்வரர்கள் வாச்சியார்த்தமாம். இந்த சீவேஸ்வரர்களின் வாச்சியார்த்த தர்மங்களின்றி ய சேதன பாகங்களான பிரம்ம கூடத்த சொரூபமே இலட்சியார்த்தமாம். **(அறு = பரம்பொருள்; சிற்சொரூபம்= கூடத்தன்)**

**விளக்கம்: முரண்ட சீவ பரங்கள் தம்முடன் முக்கியப் பொருளாவதே** என்பது:

| **ஈஸ்வரன்** | **சீவன்** |
|---|---|
| *சர்வ சக்திமான் (எல்லா ஆற்றலுடையவன்)* | *அற்ப சக்திமான்* |
| *சர்வஞ்ஞன் (எல்லாம் உணர்பவன்)* | *அற்பஞ்ஞன்* |
| *விபு (வியாபகன்)* | *பரிச்சின்னன்* |
| *ஈசன் (சகலமும் நடத்துவோன்)* | *அநீசன்* |
| *சுதந்திரன்* | *கர்மாதீனன்* |
| *பரோட்சன்(சீவனுக்கு பிரத்தியட்சமாகாதவன்)* | *பிரத்தியட்சன்* |
| *மாயி (மாயையை சுவாதீனமாயுடையவன்)* | *அவித்தியா மோகிதன்* |
| *பந்த மோட்சம் இல்லாதவன்* | *பந்த மோட்சமுடையவன்* |

சீவேஸ்வர தர்மங்களான இவைகள் தத், துவம் பதங்களின் வாச்சியார்த்தங்களாகும். தம்மில் விரோதப்படுவதால் (முரண்படுவதால்) சீவேஸ்வர ஐக்கியம் சம்பவியாது என்கிறார்.

### லட்சியார்த்தத்தால் பேதம் நீங்கிடின் பரவஸ்துவாகலாம் எனல்

ஊக்கி யப்பர சீவர் தங்கள் உடம்பு இரண்டும் இலக்கணா
வாக்கி யப்படி நீக்கி னால்ஒரு வஸ்து வேபர வஸ்துவே. (71)

**பதவுரை:** ஊக்கி அப்பர சீவர் தங்கள் = உற்சாகத்தோடு அந்த சீவேஸ்வரர்களுடைய; உடம்பு இரண்டும் = சமஷ்டி, வியஷ்டி உடல்கள் இரண்டையும்; இலக்கணா வாக்கியப்படி = இலட்சியார்த்தப் பிரகாரம் ; நீக்கினால் = விட்டு விட்டால்; ஒரு வஸ்துவே பரவஸ்துவே = ஒப்புமையற்ற அந்த கூடத்தனே பிரம்மமாகும்.

**பொழிப்புரை:** உற்சாகத்தோடு அந்த சீவேஸ்வரர்களுடைய சமஷ்டி,வியஷ்டி உடல்கள் இரண்டையும் இலட்சியார்த்தப் பிரகாரம் விட்டு விட்டால், ஒப்புமையற்ற அந்த கூடத்தனே பிரம்மமாம்.

**விளக்கம்: இலக்கணா வாக்கியப்படி** என்பது: எந்த அர்த்தம் பதத்தின் **சக்தியால்** அறியப்படவில்லையோ, ஆனால் **இலட்சணையால்** அறியப்படுகிறதோ அது பதத்தின் இலட்சியார்த்தம் எனப்படும்.

### மூன்று வகையான இலட்சணைகளைக் கூறல்

ஓரில் விட்டதும் விட்டி டாததும் உபய மும்என உணர்வுளோர்
தேரி லக்கணை திரிவி தத்தில் இசைப்பர் மற்றது இயம்புவாம். (72)



**பதவுரை:** ஓரில் = ஆராய்ந்திடில்; விட்டதும் = விட்ட இலட்சணை என்றும்; விட்டிடாததும் = விடாத இலட்சணை என்றும்; உபயமும் என = விட்டு விடாத இலட்சணை என்றும்; உணர்வுளோர் =ஆன்றோர்கள்; தேரிலக்கணை திரிவிதத்தில் இசைப்பர் = தேர்ந்த இம்மூன்று இலட்சணைகளால் சொல்லுவார்கள்; மற்றது இயம்புவாம் = அவற்றை இப்போது கூறுகின்றேன்.

**பொழிப்புரை:** ஆராய்ந்திடில் விட்ட இலட்சணை என்றும் , விடாத இலட்சணை என்றும், விட்டு விடாத இலட்சணை என்றும் ஆன்றோர்கள் தேர்ந்த இம்மூன்று இலட்சணைகளால் சொல்லுவார்கள்.அவற்றை இப்போது கூறுகின்றேன்.

**விளக்கம்:** வாச்சியார்த்தம் முழுதும் விட்டு அதன் தொடர்பு மட்டுமே கொள்ளப்படுவது **விட்ட இலட்சணையாம்**.வாக்கியத்தில் அதன் சொற்களை விடாது அதனோடு தொடர்பு கொண்டு அவ்வாக்கியத்திற்கு அர்த்தம் கொடுப்பதற்கு உபயோகப்படும் சொற்களைச் சேர்த்தால் தான் பொருள் தரும். இது **விடாத இலட்சணையாம்**.வாக்கியத்திலுள்ள பதங்களில் விரோதமான பாகங்களை விட்டு, விரோதமில்லாத பாகங்களை விடாமல் கொள்வது **விட்டு விடாத இலட்சணையாம்**.

### விட்ட இலட்சணையைக் கூறல்

மஞ்சு கூப்பிடல் என்றல் போலவும் வடப கீரதி உள்ளதே
விஞ்சு கோடம்அது என்றல் போலவும் விட்ட லக்கணை யாவதே. (73)

**பதவுரை:** மஞ்சு கூப்பிடல் என்றல் போலவும் =கட்டில் அழைக்கிறது என்பது போலவும்;வடபகீரதி உள்ளதே விஞ்சு கோடம் அது என்றல் போலவும் = வட கங்கையிலுள்ளது பெரிய கிராமம் என்பது போலவும்; விட்ட லக்கணையாவதே = (சொல்வது) விட்ட இலட்சணையாம்.

**பொழிப்புரை:** கட்டில் அழைக்கிறது என்பது போலவும் ,வட கங்கையிலுள்ளது பெரிய கிராமம் என்பது போலவும் சொல்வது விட்ட இலட்சணையாம்.

**விளக்கம்: மஞ்சு கூப்பிடல் என்றல் போலவும்** என்பது:கட்டில் கூப்பிடுகிறது என்பதில் கட்டிலை விட்டு அதிலிருக்கும் ஒருவன் கூப்பிடுகிறான் என்பதே.ஏனெனில்,கட்டில் சடப்பொருள் கூப்பிடாது.ஆகவே கட்டிலை விட்டு அதற்கு சம்பந்தமுடைய புருடன் என்று புரிந்து கொள்வது போல,கட்டில் கூப்பிடுகிறது என்ற வாச்சியார்த்தத்தை அறவே விட்டு, புருடன் என்ற இலட்சியார்த்தத்தைக் கொள்ள வேண்டும்.இவ்வாறே கங்கையில் கிராமம் என்பதில் கங்கை என்றால் நதி என்கின்ற பிரவாகம் என்னும் பொருளை விட்டு, கங்கையின் கரையைப் பொருளாகக் கொள்ள வேண்டும். ஏனெனில் நதிப் பிரவாகத்தில் கிராமம் இருக்கமுடியாது . எனவே கங்கை என்ற வாக்கியத்தை முழுதுமாக விட்டு, அதனோடு தொடர்புடைய கரையைக் கொண்டால்

உணரலாம். அதாவது சொல்லின் நேரடி பொருளை விட்டு அம்முழுமையான வாக்கியத்திற்கு தகுந்தவாறு தாற்பரியத்தைக் கொள்ள வேண்டும். இது **விட்ட இலட்சணை** எனப்படும்.

### விடாத இலட்சணையைக் கூறுதல்

சிவலை நின்றது வெள்ளை போயின தென்று செப்புதல் போலவே
கவலை யின்றி விடாத லக்கணை என்று நீகொள் கருத்திலே. (74)

**பதவுரை:** சிவலை நின்றது வெள்ளை போயினது = சிவப்பு நிற்கின்றது, வெள்ளை ஓடுகின்றது ; என்று கவலை யின்றி செப்புதல் போலவே = என்று அசட்டையாய்ச் சொல்லுதல் போல: விடாத லக்கணை என்று நீ கொள் கருத்திலே = விடாத இலட்சணை என்று நீ மனதினில் கொள்.

**பொழிப்புரை:** சிவப்பு நிற்கின்றது, வெள்ளை ஓடுகின்றது என்று அசட்டையாய்ச் சொல்லுதல் போல விடாத இலட்சணை என்று நீ மனதினில் கொள்.

**விளக்கம்:** சிவப்பு நிற்கிறது, வெள்ளை ஓடுகிறது என்னும் வாக்கியத்திலே, சிவப்பு, வெள்ளை என்பது நிறங்களைக் குறிக்கிற பண்புப் பெயராகும். ஓடுகிறது என்பது செயலைக் குறிக்கின்ற சொல்லாகும். நிறங்கள் ஓடாது அல்லது நிற்காது. எனவே இதனுடன் சம்பந்தமுள்ள பிறிதொன்றை குறிக்கவே நிறங்கள் வந்தது எனத் தெளிவாகிறது. சிவப்பு மாடு, வெள்ளை மாடு என்றோ சிவப்புக் குதிரை, வெள்ளைக் குதிரை என்றோ இருந்தால்தான் பொருள் கொடுக்கும். அதாவது சிவப்புக் குதிரை நிற்கிறது, வெள்ளைக் குதிரை போயிற்று என்று அதனோடு தொடர்புடைய வேறொரு சொல்லை சேர்ப்பின் பொருள் கொடுக்கும். இவ்வாக்கியத்தில் நிறம் அவற்றை அடையாளம் காண உதவுகிறது. ஆகவே சிவப்பு, வெள்ளை போன்ற நிறங்களை விடாமல் இருந்தால்தான் இவ்வாக்கியங்களை புரிந்து கொள்ள முடியும். எனவே வாக்கியத்தை விடாமல் பொருள் கொள்ளுதல் **விடாத இலட்சணை** என்பதாம்.

### விட்டு விடாத இலட்சணையைக் கூறல்

மேவும் விட்டுவிடாத லக்கணை மெய்ம்மை யாதெனின் அந்தஇத்
தேவ தத்தன் எனும்பொ ருட்படி சிந்தை செய்திடு தீரவே. (75)

**பதவுரை:** மேவும் விட்டு விடாத லக்கணை = பொருந்தும் விட்டு விடாத இலட்சணையின்; மெய்ம்மை யாதெனின் =உண்மையான பொருள் என்னவெனில்; அந்த இத் தேவதத்தன் எனும் பொருட்படி சிந்தை செய்திடு தீரவே = அந்த தேவதத்தனே இந்த தேவதத்தன் எனும் பொருள் தரும்படி தீர விசாரிப்பாயாக.



**பொழிப்புரை:** பொருந்தும் விட்டு விடாத இலட்சணையின் உண்மையான பொருள் என்னவெனில் அந்த தேவதத்தனே இந்த தேவதத்தன் எனும் பொருள் தரும்படி தீர விசாரிப்பாயாக.

**விளக்கம்:** அந்த காலத்தில், அந்த தேசத்தில் -காசி என்னும் தேசத்தில் அரசாண்டவனாய் இருந்த அந்த மகாராஜாவான தேவதத்தனே, இந்த காலத்தில் இந்த தேசத்தில்-இராமேஸ்வரம் என்னும் தேசத்தில், பிச்சை எடுப்பவனாய், இருக்கின்ற இந்த சந்நியாசியான தேவதத்தனாம். அந்த காலம், அந்த தேசம், இந்த காலம், இந்த தேசம் போன்ற இவற்றை விட்டு, அந்த ராஜாவான தேவதத்தனே இந்த துறவியான தேவதத்தன் என்பதை விடாமல் கொள்ள வேண்டும். அப்போது அவனை அடையாளம் காணமுடியும். ஆகவே வாக்கியத்தில் உள்ள மாறுபாடான பகுதியை விட்டு, மாறுபாடு சிறிதுமில்லாத பகுதியை விடாமல் உணர்த்தக் கூடியது எங்கு நிகழ்கின்றதோ அங்கே **விட்டு விடாத இலட்சணை** சொல்லப்படுகிறது.

### விட்டு விடாத இலட்சணையால் தன்னைக் காண வேண்டும் எனல்

விட்ட லக்கணை தனையும் விட்டுவி டாத லக்கணை தனையு(ம்)நீ
விட்டு விட்டு விடாத லக்கணை யால்வி ளங்கு விளங்கவே. (76)

**பதவுரை:** விட்ட லக்கணை தனையும் விட்டு, விடாத லக்கணை தனையு(ம்)நீ விட்டு = விட்ட இலட்சணையையும், விடாத இலட்சணையையும் நீ விட்டு விட்டு; விட்டு விடாத லக்கணையால் விளங்கு விளங்கவே = விட்டு விடாத இலட்சணையால் தத்துவமசி மகாவாக்கியத்தின் இலட்சியார்த்தமான கூடத்த பிரம்மமாகவே விளங்குவாய்.

**பொழிப்புரை:** விட்ட இலட்சணையையும், விடாத இலட்சணையையும் நீ விட்டு விட்டு, விட்டு விடாத இலட்சணையால் தத்துவமசி மகாவாக்கியத்தின் இலட்சியார்த்தமான கூடத்த பிரம்மமாகவே விளங்குவாய்.

**விளக்கம்:** தத், துவம் பதத்தில் சீவேஸ்வரருக்கு கூடத்தனும், பிரம்மமும் முறையே சேதன பாகங்களாம். அற்பஞ்ஞாதி, சர்வஞ்ஞாதி முதலியன முறையே சீவேஸ்வரரது தர்மங்களாம். அதாவது வாச்சியார்த்தங்களாம். விட்ட இலட்சணையின்படி வாக்கியத்தின் நேரடிப்பொருள் கொடுக்கும் சீவேஸ்வரரை -கங்கையை விடுதல் போல அதாவது கங்கை என்பதன் நதிப் பிரவாகத்தை - விட்டால் அதனோடு சேதன பாகமான கூடத்த பிரம்மமும் விட்டுப்போகும். அதனால் கங்கையின் கரையைக் கொள்வது போல அசத்து சட துக்கத்தை கொள்ள வேண்டி வரும். எனவே **விட்ட இலட்சணையால்** தத்துவமசி மகாவாக்கியத்திற்கு இலட்சியார்த்தம் பொருந்தாது.

வாக்கியத்தை விடாமல் அதனோடு சம்பந்தமுடைய பொருளையும் சேர்த்தால்தான் அர்த்தமாகும் என்பது விடாத இலட்சணையாகும். அற்பஞ்ஞாதி, சர்வஞ்ஞாதி முதலிய முரண்பட்ட, விரோதமான தர்மங்களையுடைய சீவேஸ்வரர்களின் வாச்சியார்த்தத்தை விடாது-அதாவது சிவப்பு,வெள்ளை என்பதை விடாது, வாக்கியத்தோடு தொடர்புடைய குதிரைகளோடு பொருள் கொள்வது போல - அதனோடு சம்பந்தமுடைய கூடத்த பிரம்ம சேதன பாகங்களான இலட்சியார்த்தத்தைச் சேர்த்து பொருள் கொள்ளுதல் **நெருப்பு குளிர்ந்திருக்கின்றது** என்று கூறுவது போலவாம்.எனவே **விடாத இலட்சணையாலும்** தத்துவமசி மகாவாக்கியத்திற்கு இலட்சியார்த்தம் பொருந்தாது.

அற்பஞ்ஞாதி, சர்வஞ்ஞாதி முதலிய முரண்பட்ட, விரோதமான தர்மங்களையுடைய சீவேஸ்வரர்களின் வாச்சியார்த்தத்தை விட்டு – அதாவது அந்த காலம்,அந்த தேசம், இந்த காலம், இந்த தேசம் போன்ற இவற்றை விடுவது போல - கூடத்த பிரம்ம சேதன பாகங்களான இலட்சியார்த்தத்தைச் சேர்த்து பொருள் கொள்ளுதல் - அதாவது அந்த (ராஜாவான) தேவதத்தனே இந்த(துறவியான) தேவதத்தன் என்பதை விடாமல் கொள்ளல் போல - வாக்கியத்தில் உள்ள மாறுபாடான பகுதியை விட்டு,மாறுபாடு சிறிதுமில்லாத பகுதியை விடாமல் உணர்த்தக் கூடியது எங்கு நிகழ்கின்றதோ அங்கே விட்டு விடாத இலட்சணை சொல்லப்படுகிறது என்பதற்கிணங்க **விட்டு விடாத இலட்சணையால்** தத்துவமசி மகாவாக்கியத்திற்கு இலட்சியார்த்தம் பொருந்துகிறது .

**வி ளங்கு விளங்கவே** என்பது: சீவனில் உள்ள சிதாபாசனை ஒழித்து விட்டால் சச்சிதானந்த சொரூபநிலையாய். நான் என்கின்ற சிதாபாசன் போய், தானாகிய கூடத்தனாய் பிரகாசிப்பாய்.

### அவதாரிகை

தான் எனும் தத்துவத்தை தரிசிக்க தாங்கள் உரைத்திட வேண்டும் என்று சசிவன்னன் **பாடல் 77-ல்** வேண்டுவதும், உபாதிகளை நீக்கி, சீவ பிரம்ம ஏகத்துவத்தை உணர்வாய் என்றும்,தன்னை அறிவு (நனவிலும்) அறியாமைகளால் (சுழுத்தியிலும்) அறிய இயலாதென்றும், அவைகள் அவஸ்தாத்திரயங்கள் என்றும், நனவினில் சுழுத்தி நிலைப் பெற்றால்தான், அப்பொருள் இயல்பாக விளங்கும் என்றும், சீவ பர துரியமே கூடத்த பிரம்மமெனவும், அவ்வாறு உணர்ந்த பொருளே தத்துவமசி பதத்தின் முடிவான பொருள் என்றும், சுருதி யுக்தி அனுபவமுடைய குருநாதர் கூறுவதுவும், தன்னை அடையப்பெறுதல் எளிதில் கிடைக்காதது என உரக்கக் கூறி குருவின்



திருவடிகளை சசிவன்னன். நமஸ்கரிப்பதுவும் **78-முதல் 84**-வரையிலான பாடல்களில் கூறுகிறார்.

### *சீடன் தனது சொரூப தரிசனத்தைக் காண வேண்டல்*

போது மேவிய தேசம் விட்டுஒரு புருட னைக்கொளு மாறுபோல்
ஓதும் ஈருடல் கண்டு விட்டுஅதன் உண்மை காண உரைத்திடே. (77)

**பதவுரை:**போது மேவிய தேசம் விட்டு = காலமும், இருந்த தேசமும் விட்டு; ஒரு புருடனைக் கொளுமாறுபோல் = ஒரே புருடனைக் காண்கின்ற செயல் போன்று; ஓதும் ஈருடல் = முன்னர் கூறிய இரண்டு (சமட்டி, வியட்டி) உடல்களையும் ; கண்டு விட்டு அதன் உண்மை காண உரைத்திடே = தெரிந்து, அவை நீங்கிய பின், தான் எனும் தத்துவத்தை தரிசிக்க தாங்கள் உரைத்திட வேண்டும்.

**பொழிப்புரை:** காலமும், இருந்த தேசமும் விட்டு ஒரே புருடனைக் காண்கின்ற செயல் போன்று, முன்னர் கூறிய இரண்டு (சமட்டி, வியட்டி) உடல்களையும் தெரிந்து, அவை நீங்கிய பின், தான் எனும் தத்துவத்தை தரிசிக்க தாங்கள் உரைத்திட வேண்டும் என சீடன் வேண்டினான்.

### *குரு தன் அனுபவம் கூறத் தொடங்குதல்*

பிரியாவுயிர் காரியமாம் உடலும் பிரம்மத்துறு காரணமாம் உடலும்
கரியாகிய வாதனையும் கழியக் காட்டும்படி கண்டுகொள் கண்ணுறவே. (78)

**பதவுரை:**பிரியாவுயிர் காரியமாம் உடலும் = சீவனை விட்டு நீங்காத காரிய உபாதியான இம்மூன்று சரீரமும்; பிரம்மத்துறு காரணமாம் உடலும் =பரத்தை விடாது பொருந்திய காரண உபாதியான மூன்று சரீரமும்;கரியாகிய = இவ்விரண்டினுக்கும் சாட்சியான கூடத்த பிரமம் என்னும்;வாதனையும் கழிய = பேத வாசனையும் நீங்க : காட்டும்படி = நாம் காண்பிப்பது போல்; கண்டுகொள் கண்ணுறவே = அறிந்து கொள் தெளிவாகவே.

**பொழிப்புரை:** சீவனை விட்டு நீங்காத காரிய உபாதியான இம்மூன்று சரீரமும், பரத்தை விடாது பொருந்திய காரண உபாதியான மூன்று சரீரமும், இவ்விரண்டினுக்கும் சாட்சியான கூடத்தன், பிரம்மம் என்னும் பேத வாசனையும் நீங்க, நாம் காண்பிப்பது போல் அறிந்து கொள் தெளிவாகவே.

### *தன்னை அறியாமைகளால் அறியக்கூடாது எனல்*

கரணத்திரள் நிற்பினும் அப்பொருளைக்
காணக்கிடை யாதுஅவை கையறவே
மரணப்படி னும்அது கண்டுகொளும்
வழியில்லை எனும்படி நீமதியே. (79)

**பதவுரை:** கரணத்திரள் நிற்பினும் = கரணக் கூட்டங்கள்(அனேகம்) இருந்தாலும்; அப்பொருளைக் காணக் கிடையாது = அந்த வஸ்துவை பார்க்க (அறிய) முடியாது; அவை கையறவே = அந்தக் கரணக் கூட்டங்கள் செயலிழந்து; மரணப்படினும் = (சுழுத்தியில்) லயமாகிடினும்; அது கண்டுகொளும் வழியில்லை எனும்படி நீ மதியே = அவ்வஸ்துவினை அறிந்து கொள்ளும் மார்க்கம் இல்லை என்றவாறு நீ தெரிந்து கொள்வாயாக.

**பொழிப்புரை:** நனவில் கரணக் கூட்டங்கள் அனேகம் இருந்தாலும் அந்த வஸ்துவை அறிய முடியாது. உறக்கத்தில் அந்தக் கரணக் கூட்டங்கள் செயலிழந்து லயமாகின்றதால் அவ்வஸ்துவினை அறிந்து கொள்ளும் மார்க்கம் இல்லை என்றவாறு நீ தெரிந்து கொள்வாயாக.

**கருத்து :** அகக்கரணங்கள், புறக்கரணங்கள், அந்தக் கரணங்கள் செயல்படும் நிலையிலும், அவை செயல்படாத உறக்கத்திலும், அவ்வஸ்துவை, அவைகளைக் கொண்டு காண இயலாது.

**அவஸ்தாத்திரயம் கூறல்**

எந்தக்கர ணங்களும் மேவநனா
இதன்வாதனை யால்விட யங்களொடே
அந்தக்கர ணங்கள் பொருந்தல்கனா
அவைமாய்தல் சுழுத்தி அவத்தையதே. (80)

**பதவுரை:** எந்தக் கரணங்களும் மேவ நனா = அந்தக் கரணங்களும் அக,புறக்கரணங்களும் பொருந்த நனவு அவஸ்தை ; இதன் வாதனையால் = இந்த சாக்கிரத்தின் வாசனையால்;விடயங்களோடே அந்தக்கரணங்கள் பொருந்தல் கனா = விஷயங்களோடு அந்தக்கரணங்கள் சேர்வது கனவு அவஸ்தையாம்; அவை மாய்தல் சுழுத்தி அவத்தையதே = அந்தக்கரணங்களும் புறக்கரணங்களும் ஒடுங்குதல் சுழுத்தி அவஸ்தையாம்.

**பொழிப்புரை: :** மனம் முதலிய அந்தக் கரணங்களும், ஞானேந்திரிய, கர்மேந்திரிய முதலிய அக, புறக்கரணங்களும் பொருந்த நனவு அவஸ்தை. இந்த சாக்கிரத்தின் வாசனையால், விஷயங்களோடு அந்தக்கரணங்கள் சேர்வது கனவு அவஸ்தையாம். அந்தக்கரணங்களும் அக,புறக்கரணங்களும் ஒடுங்குதல் சுழுத்தி அவஸ்தையாம். (மூன்று அவஸ்தைகளையும் விளக்கியது.)

**நனவினில் சுழுத்தி நிலை வர வேண்டுமெனல்**

வினவில் பரத்தைஅறி வுறுதற்கு அவத்தைபுலன் வினைமாறியே
நனவில் சுழுத்திநிலை வரின்அப் பொருள்திகழு(ம்) நலனாகவே. (81)



**பதவுரை:** வினவில் பரத்தை அறிவுறுதற்கு= பரவஸ்துவை அறிய வேண்டும் எனக் கேட்பாயானால்; அவத்தை புலன் வினை மாறியே = மூன்று அவஸ்தைகளையும், அதனை அறியும் மூன்று அபிமானிகளையும், அவற்றின் இடமாகிய மூன்று தேகங்களையும் வேறாக்கியே ; நனவில் சுழுத்தி நிலை வரின்= விழிப்பு நிலையில் சுழுத்தியின் தன்மை வந்திடின்; அப்பொருள் திகழும் நலனாகவே= அப்பர வஸ்து ஆனந்த அனுபவமாய் விளங்கும்;

**பொழிப்புரை:** பரவஸ்துவை அறிய வேண்டும் எனக் கேட்பாயானால், (நனவு,கனவு,உறக்கம் எனும்) மூன்று அவஸ்தைகளையும், அதனை அறியும் (விசுவன்,தைஜசன்,பிராஞ்ஞன் ஆகிய) மூன்று அபிமானிகளையும், அவற்றின் இடமாகிய (தூல,சூக்கும, காரணம் எனும்) மூன்று தேகங்களையும் அதனதன் இயல்பிலிருந்து வேறாக்கி, விழிப்பு நிலையில் சுழுத்தியின் தன்மை வந்திடின் அப்பர வஸ்து ஆனந்த அனுபவமாய் விளங்கும்.

**விளக்கம்:** விழிப்பு நிலையில்(நனவில்) மனம்,புத்தி,சித்தம்,அகங்காரம் ஆகிய அந்தக்கரணங்கள்,கண்,காது,மூக்கு,நாக்கு,துவக்கு(தோல்) என்னும் ஞானேந்திரியங்கள் மற்றும் கர்மேந்திரியங்களான வாக்கு. கை, கால், ஆசனவாய், குறி ஆகிய இவற்றின் துணை கொண்டு உலக விஷயங்களில் ஈடுபட்டு தன் உண்மை சொருபத்தை அறியாது சிதாபாச சீவனாக இருக்கிறான். கனவில் அந்தக்கரணம் மட்டும் தொழில் புரியும். சுழுத்தியில் (உறக்கத்தில்) சூன்யமே(அஞ்ஞானமே) மிஞ்சுகிறது. தூக்கத்திலிருந்து விழித்தவன் கர்மேந்திரிய,ஞானேந்திரிய,அந்தக்கரணம் அனைத்தும் இறந்திருந்த உறக்கத்தில் நான் சூன்யத்தை மட்டுமே பார்த்தேன்.ஆனந்தத்தை அனுபவித்தேன் என்று சொல்கிறான். ஆகவே மனம் முதலான எக்கரணங்களின் துணையின்றி ஆனந்தத்தை அனுபவிப்பவன் சாட்சி மாத்திரமாக இருக்கும் ஒரு புருடன் என்பதாக உணர வேண்டும்.அவனே தான் நனவிலும்,கனவிலும் சாட்சியாக இருக்கிறான் என்றும் அறிய வேண்டும். எனவே சிதாபாசனின் பிடியிலிருக்கும் **அவத்தை புலன் வினை** இவற்றை அதனதன் இயல்பிலிருந்து வேறாக்க வேண்டும் என்கிறார்.

**நனவில் சுழுத்தி நிலை வரின்** என்பது: உறக்கத்தில் ஆனந்தமாக தூங்கினேன் என்ற அனுபவம் விழித்தவுடன் சகலருக்கும் இருக்கிறது. இவ்வானந்தத்தை பிரகாசிக்கச் செய்த சாட்சி, சித்து சொருபமானதால் அஞ்ஞான அவஸ்தையான உறக்கத்தில் ஒளிர்விப்பது போல, நனவிலும் கனவிலும் உள்ள அனைத்து விஷயங்களையும் பிரகாசிக்கின்றது. இதனால் மூன்று (நனவு,கனவு,சுழுத்தியாகிய) அவஸ்தைகளிலும் சாட்சி சித்தாய் இருக்கின்றது எனப் பெறப்படுவதால், முக்காலத்தும் இருப்பு உடையது எனப்படுகிறது. அதனால் சாட்சி சத்தாகவும் இருக்கின்றது என்பதாம். அனைத்துக் கரணங்களும்

இறந்தவிடமான உறக்கத்தில் ஆனந்தம் அனுபவிக்கப்படுகின்றதால். நனவிலும் அந்நிலையைப் பெற - கரணங்கள் யாவும் லயப்படுமானால் (நசிக்கப்படுமாயின்), முக்காலத்தும் இருப்புடைய (சத்தாயிருக்கின்ற) சித்தினால் ஆனந்தம் வெளிப்படும் என்பதே **நனவில் சுழுத்தி நிலை**யாகும். இந்நிலையை (துரியத்தை) அடையப் பெற்றிடில் சிதாபாசன் வீழ்ந்து, சச்சிதானந்த சொரூபமாய் பரமானந்த நிலையிலேயே திகழலாம்.

### சீவ பர துரியத்தைக் கூறல்

திவிதத்(து) அவத்தைகளை அறிவுற்ற அத்துரிய நிலைசீவனே
இவிதத்தில் அப்புருடன் நனவுற்ற அத்துரிய நிலைஈசனே. (82)

**பதவுரை:** திவிதத்(து) அவத்தைகளை =மூன்று வித அவஸ்தைகளையும்; அறிவுற்ற அத்துரிய நிலை சீவனே = சாட்சியாய் நின்றறிந்த அத்துரிய நிலையே கூடத்தனாம்; இ(வ்)விதத்தில் அப்புருடன் நனவுற்ற அத்துரிய நிலை ஈசனே =இவ்விதமாகவே அக்கூடத்தனானவன், விராட்டு முதலான மூன்று அவஸ்தைகளையும் அறிந்து எஞ்சி நின்ற அத்துரிய நிலையே பிரம்மமாம்.

**பொழிப்புரை:** மூன்று வித அவஸ்தைகளிலும் சிதாபாச சீவனாய் இருந்தமையை, சாட்சியாய் நின்றறிந்த நனவினில் சுழுத்தியான, அத்துரிய நிலையிலுள்ள கூடத்தனாம். இவ்விதமாகவே அக்கூடத்தனானவன், விராட்டு முதலான மூன்று அவஸ்தைகளையும் அறிந்து எஞ்சி நின்ற அத்துரிய நிலையிலுள்ள பிரம்மமாம்.

### தத்துவமசி மகா வாக்கியத்தின் முடிவான பொருளைக் கூறுதல்

அகிலக் கரிப்பரம துரியப் பொருள்துரியம் அதுவாகையே
புகலுற்ற தத்தொமசி எனுமுப் பதத்தின்முடி பொருளாவதே. (83)

**பதவுரை :** அகில கரிப் பரம துரியப் பொருள் = அனைத்திற்கும் சாட்சியான ஈஸ்வர துரியமான பிரம்மமே ; துரியம் = சீவ துரியமாம்; அது ஆகையே = அவ்வாறு ஆகுதலே ;புகலுற்ற = உபதேசித்த மகாவாக்கியமான ; தத்தொமசி எனும் முப்பதத்தின் முடி பொருளாவதே = தத் - துவம் - அசி (அது நீயாக இருக்கிறாய்) என்னும் மூன்று பதங்களின் முடிவான அர்த்தமாகுமாம்

**பொழிப்புரை:** அனைத்திற்கும் சாட்சியான ஈஸ்வர துரியமான பிரம்மமே சீவ துரியமாம். அவ்வாறு ஆகுதலே உபதேசித்த மகாவாக்கியமான தத்- துவம்- அசி (அது நீயாக இருக்கிறாய்) என்னும் மூன்று பதங்களின் முடிவான அர்த்தமாகுமாம்.

**விளக்கம்: அகில கரிப்பரம துரியப் பொருள் துரியம்** என்பது : **வத்து நிலை இருந்தபடி இருந்த மவுன சுபாவம் துரியமாகும்**- கைவல்யம். அதாவது, ஆன்ம சுபாவத்தில் இருந்தபடி இருக்கும் மோன நிஷ்டையே துரியமாம். **தன்னாலும்**



**பிறராலும் எழுதலில்லாத(சொரூபத்தில் )நிலைத்த மனத்தின் நிலை துரியமாம்**– ஸ்ரீமத் வடிவேல் செட்டியார் . **நிலை பெற்ற தன் சுபாவத்தே நிற்றல் தானே மறைந்த பொருள் வெளியாக்கும் துரியமாகும்** - ஞான வாசிட்டம்.(பொருள்: தன் சொரூப சுபாவத்தில் நிற்றலே பிரம்மப் பொருளான வெளியாய் இருப்பதான துரியம்.)

எந்த பிரம்ம வேத்தாவின் (பிரம்மத்தை அறிந்தவனது) மனமும் வாசனையும் அத்தியந்தம் நாசமாயிருக்கின்றனவோ அவன் அந்த அகண்ட பிரம்மத்தோடு தன்மயமாயிருத்தலின் ஒரு போதும் பிறராலும் விழிப்படை -வதில்லை. நீர் நிரம்பிய குடத்தை குளத்தில் வைத்த போது அந்தக் குடத்தின் உள்ளிலும் வெளியிலும் நீர் நிறைந்திருப்பதைப் போல..... துரிய மென்னும் யோக பூமியில் இருத்தலால், ரிஷபர் முதலியோரைப் போல சொரூபத்தி -னின்றும் பிரிகின்றதில்லை. **இவனே பிரம்ம வித் வரிஷ்டன்** என்று விசார சந்திரோதயம் கூறுவதும்,துரியமென்னும் ஏழாம் பூமியிலுள்ள பிரம்ம வித் வரிஷ்டன் என்னும் சீவன் முத்தனுக்கு எப்போதும் காட சுழுத்தி போன்ற அவஸ்தை இருக்கிறது என்று பாலபோதம் கூறுவதும் இங்குணரற்பாலது எனவும் ஸ்ரீமத் வடிவேல் செட்டியார் கூறுகிறார்.

ரிக்,யஜுர்,சாமம்,அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களின் முடிவான அர்த்தங்களைக் கூறுவது **பிரஞ்ஞானம் பிரம்மம்,அஹம் பிரம்மாஸ்மி. தத்துவமசி. அயம் ஆத்மா பிரம்மம்** என்னும் மகா வாக்கியங்களே. இந்நூலாசிரியர் சாம வேதத்தின் சாந்தோக்ய உபநிஷத்தின் ஆறாம் பிரபாடகத்தின் கண்ணே சுவேதகேது என்ற ஆருணேயருக்கு அவரது பிதா உத்தாலகரால் கண்டம் 8-ல் ஆரம்பித்து 16-ம் கண்டம் முடிய ஒவ்வொரு கண்டத்தின் முடிவிலும் **அப்படிப்பட்ட இவர் அனுப்பிரமாண வஸ்து ; இந்த எல்லா ஜகத்தும் இந்த ஆத்மா உள்ளது ;அது சத்ய வஸ்து ; அதுதான் ஆத்மாவென்று சொல்லப்படுகிறது; ஹே ! சுவேதகேதுவே !அது நீயாக இருக்கிறாய் !** என்று ஒன்பது முறை உபதேசித்தார்.இதனால் **தத்துவமசி** மகாவாக்கியம் **உபதேச வாக்கியம்** என்று அழைக்கப்படுகின்றது.

### சசிவன்னன் குருவின் பாதம் பணிதல்

நிமலப் பொருள்சுருதி நெறியில் பெறக்கருணை நிதிகூறவே
அமலப்பொருள் பெறுதல் அருமைத் தெனக்கழறி அடிவீழவே. (84)

**பதவுரை :** நிமலப் பொருள் சுருதி நெறியில் பெறக் கருணை நிதிகூறவே = நின்மலமான அத்துவித வஸ்துவை உபநிஷத்துக்கள் கூறிய வண்ணம் அடையும்படி கருணையே வடிவான குருநாதர் கூறினார்;அமலப் பொருள் பெறுதல் அருமைத்தெனக் கழறி அடி வீழவே = களங்கமற்ற தன்னை அடையப் பெறுதல் எளிதில் கிடைக்காதது என உரக்கக் கூறி குருவின் பாதங்களில் வீழ்ந்து வணங்கினான்.

**பொழிப்புரை:** நின்மலமான அத்துவித வஸ்துவை உபநிஷத்துக்கள் கூறிய வண்ணம் அடையும்படி கருணையே வடிவான குருநாதர் கூறினார். களங்கமற்ற தன்னை அடையப் பெறுதல் எளிதில் கிடைக்காதது என உரக்கக் கூறி குருவின் பாதங்களில் வீழ்ந்து சசிவன்னன் வணங்கினான்.

**அவதாரிகை**

**85-முதல் 89-வது** பாடல் வரை குரு சீடனுக்கு பாத தீர்த்தத்தைக் கொண்டு அபிஷேகம் செய்வித்தலையும் தான் உண்டு மீதமான உணவைப் பிரசாதமாக அளித்தலையும், கவசமாக விபூதியை சீடனது உடல் முழுதும் பூசியதையும், உடல், பொருள், ஆவி மூன்றையும் குருவிற்கு அர்ப்பணிக்கச் செய்தலையும், தனது பாதங்கள் இரண்டையும் சீடனது சிரத்தின் மேல் வைத்து திருவடி தீட்சை தந்தருளியதையும், ஞான விழியைக் கொடுத்து முப்பதப் பொருளைக் கூறுமாறு சசிவன்னனுக்குக் கட்டளையிடுதலையும், ஆசாரியர் அனுக்கிரகித்தபடி தனது அனுபவத்தை சசிவன்னன் சொல்லப் புகுதலையும் கூறுகிறார்

குரு சீடனுக்கு மங்கல ஸ்நானம் செய்வித்தல்

தமரக் கலைக்களவு தெரிவுற்ற தற்பொருள தனையீகுவான்
அமரர்க்(கு) அளப்பரிய பதநற் புனல்கொடுசெய் தபிடேகமே. (85)

**பதவுரை:** தமரக் கலைக்களவு தெரிவுற்ற = நாதரூபமாய் இருக்கின்ற வேத உபநிஷத்துக்களின் இரகசியங்களை அறிந்துள்ள (குருநாதன்); தற்பொருள் அதனை யீகுவான் = மகாவாக்கியம் கூறும் தானாகும் தத்பத அர்த்தத்தை (சீடனுக்கு) கொடுக்க வேண்டி; அமரர்க்(கு) அளப்பரிய= தேவர்களும் அளவிடுதற்கு அரியதான; பத நற் புனல் கொடு செய்த அபிடேகமே =பாத தீர்த்தத்தைக் கொண்டு அபிஷேகம் செய்வித்தார்.

**பொழிப்புரை:** நாதரூபமாய் இருக்கின்ற வேத உபநிஷத்துக்களின் இரகசியங்களை அறிந்துள்ள குருநாதன் மகாவாக்கியம் கூறும் தானாகும் தத்பத அர்த்தத்தை சீடனுக்கு கொடுக்க வேண்டி தேவர்களும் அளவிடுதற்கு அரியதான பாத தீர்த்தத்தை (தனது பாதங்களைக் கழுவிய நீரை )க் கொண்டு சசிவன்னனுக்கு அபிஷேகம் செய்வித்தார்.

குரு சீடனுக்கு விபூதிப் பிரசாதம் அனுக்கிரகித்தல்

பவளத்தின் வைத்தஅமிர் தினின்மிச்சி லிட்டினிய பரிவோடும்ஆர்
தவளப் பொடிக்கவசம் எனவிட் டுடல்பகைகள் தலைசாயவே. (86)

**பதவுரை:** பவளத்தின் வைத்த அமிர்தினின் மிச்சிலிட்டு = பவளம் போன்ற உதடுகளில் வைத்த அமிர்தத்தில் மீதமான பிரசாதத்தைக் கொடுத்து;இனிய



பரிவோடும் = இனிய கருணை அன்போடு; ஆர் தவளப் பொடிக் கவசம் என விட்டு = வெள்ளை நிற விபூதியை பாதுகாப்பு உறை போல் சீடனது தேகம் முழுதும் பூசி விட்டு ; உடல் பகைகள் தலைசாயவே = மூவித சரீர உபாதிகளும் நசிக்கும் படியாகவே.

**பொழிப்புரை:** பவளம் போன்ற உதடுகளில் வைத்த அமிர்தம் போன்ற உணவில் மீதமான பிரசாதத்தைக் கொடுத்து, இனிய கருணை அன்போடு வெள்ளை நிற விபூதியை பாதுகாப்பு உறை போல் சீடனது தேகம் முழுதும் பூசி விட்டு மூவித சரீர உபாதிகளும் நசிக்கும் படியாகவே.

உற்ற எவையும் உணர்ந்தோனாய் யோகிகட்குள்
உயர்ந்தோனாம் ஆனந்த பராயணன்தான்
மற்றும் அவன் சேவையினால் மகிழ்ந்தோனாகி
மாஅருளால் தானொருநாள் புசித்த சேடம்
குற்றமறச் சசிவன்னன் தனக்களித்தான்
கொடுத்ததை நல்பிரியமுடன் புசித்ததாலே
பற்றியதன் பாவங்கள் மிகுதாபங்கள் பற்றறவே
அனைத்தையுமே தவிர்ந்தான் அன்னோன். **(21)**

(வரக்கூடிய எவற்றையும் அறியுந்தன்மை பெற்றவராயும், சித்தர்கள் யாவரிலும் முதன்மை பெற்றவராயும் இருக்கின்ற மானந்தி பராயணன், சசிவன்னனின் பணிவிடையினால் மிகுந்த மகிழ்ச்சியுற்று தான் சாப்பிட்ட அன்னத்தில் மிஞ்சியதை சீடனுக்கு அளிக்க, அதனைச் சசிவன்னன் எவ்வித அருவருப்புமின்றி பிரியத்தோடே புசித்தான். அதனால் பாவங்கள் அனைத்தும் ஒழிந்தன. ஆதி அத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தைவிகம் முதலான தாபத்திரயங்களிலிருந்து நிவர்த்தி அடைந்தான்.)

இவ்விதமாகிய பின்னர்க் குரவன் தன்னை இவன்
மிகவும் ஆதரவாய் வணங்கிப் போற்றிச்
செவ்வியதாம் பணிவிடையே செய்தான்
பின்பு சிறிதும் அகமின்றி மனச்சுத்தி பெற்ற
அவ்விதமாம் சசிவன்னன் தனைக் கண்ட ஆசான்
அறவும்அருட்சுரந்து அவன் ஆலோசித்துத்
திவ்வியமாம் பூதிகொடே அவன் தேகத்தில்
திகழ்வுறவே பூசி அருள் விழியால் பார்த்தான். **(22)**

(சசிவன்னனும் இவ்விதமாய் குருவிற்கு நெடுங்காலம் சேவை புரிந்து வந்தான். இதன் விளைவாக அசுத்த வாசனைகள் யாவும் நீங்கப்பெற்று சித்த சுத்தியினை அடைந்தான். நான்கு சாதனங்களும் கைவரப்பெற்றவனாயும்,

சிரவணம், மனனம், நிதித்தியாசனத்தைக் கடைப்பிடித்தும், பதார்த்த சோதனம் செய்பவனாகவும் (தத்துவமசி முதலான நால் வேத மகாவாக்கிய விசாரணையை உடையவனாயும்) திகழும் அவன் மீது கருணை கொண்ட குரு அவனது தேகம் முழுதும் விபூதியால் பூசி அருள் கண்கொண்டு பார்த்தார்.)

### அறுதித் திருவடி தீட்சை செய்தல்

உதகத் துடற்பொருளோ டுயிர்கைக்கொ டுச்சிமிசை ஒருபோதொடே
பதகத் தலத்தையிட இருகைத் தலத்தோடுஇரு பதமேவவே. (87)

**பதவுரை:** உதகத்து = தண்ணீரால்; உடல் பொருளோடு உயிர் = உடல் பொருள் ஆவி மூன்றும்; கைக்கொடு உச்சி மிசை ஒரு போதொடே = ஏற்றுக் கொண்டு சீடனது தலை உச்சியில் அப்போதே ;பதகத் தலத்தையிட =பாதமாகிய கிரீடத்தை வைக்கஇருகைத் தலத்தோடு = இரண்டு கைகளையும்;இருபதம் ஏவவே= குருவின் இரண்டு கால்களிலும் வைத்து நமஸ்கரித்தான்.

**பொழிப்புரை:**தண்ணீரால் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஏற்றுக் கொண்ட குருநாதர், சீடனது தலை உச்சியில் அப்போதே, தனது பாதமாகிய கிரீடத்தை வைக்கவும் ,சசிவன்னன் இரண்டு கைகளையும் குருவின் இரண்டு கால்களிலும் வைத்து நமஸ்கரித்தான்.

### சீடனது அனுபவத்தைக் கூறுமாறு பணித்தல்

ஒழியப் புலக்கண்உப நிடதப் பொருள்தெரிய வுளஞானமாம்
விழியைக் கொடுத்துமொழி எனமுப் பதப்பொருளும் வெளியாகவே. (88)

**பதவுரை :** ஒழியப் புலக் கண் உபநிடதப் பொருள் தெரிய = பொறி புலன்கள் ஒழிந்த விடத்து, உபநிடதங்களின் மகாவாக்கியங்கள் கூறும் இலட்சியார்த் -தத்தை உணர்த்தி; உள ஞானமாம் விழியைக் கொடுத்து = உள்ளத்தில் ஞான விழியைக் கொடுத்து; மொழி என முப்பதப் பொருளும் வெளியாகவே = தத்துவமசி மகாவாக்கியத்தின் மூன்று பதங்களின் அர்த்தங்களையும் வெளிப்படையாகக் கூறுவாயாக.

**பொழிப்புரை:** பொறி புலன்கள் ஒழிந்த விடத்து, உபநிடதங்களின் மகாவாக்கியங்கள் கூறும் இலட்சியார்த்தத்தை உணர்த்தி உள்ளத்தில் ஞான விழியைக் கொடுத்து தத்துவமசி மகாவாக்கியத்தின் மூன்று பதங்களின் அர்த்தங்களையும் வெளிப்படையாகக் கூறுவாயாக எனக் குரு பணித்தார்.

பின்னர் அவன் வேதாந்தம் அனைத்தினாலும்
பேதமிலாது ஓதியதாம் அகண்டார்த்தத்தை
அன்னவனுக்கு அடைவாக உபதேசித்தான்
அன்று அவனும் எனதருளால் அகண்டமாகப்



பன்னுபொருள் வடிவான என்னைத் தானாப்
பரோட்சமறத் திடமாக அறிந்தோனாகித்
துன்னிய அவ்வகண்ட ஆன்ம ஞானத்தாலே
துகளான பவபந்தம் விடுத்தான் தூயோய். **(23)**

(பின்னர் குருநாதரான மானந்தி பராயணனும் ,வேதாந்த சாத்திரங்கள் போதிக்கின்ற அகண்டார்த்தத்தை சசிவன்னன் செய்த சேவைக்கு ஈடாகும்படி உபதேசித்தார். சசிவன்னனும் (மகாதேவனாகிய) எனது அருளால் கால, தேச, வஸ்து பரிச்சேதமற்ற என்னை (ஈசனை) பரோட்சமாய், திடமாய் அறிந்தவனாகி, பொருந்திய அகண்ட ஆன்ம ஞானத்தைப் பெற்று, தோஷமுடைய பந்தத்தினால் வரும் பிறவியையும் விடுத்தான். விஷ்ணுவே.)

### சீடன் தனது அனுபவத்தைக் கூறத் தொடங்குதல்

நனவைத் துவக்கிமுடி துரியத்தை முற்றஇறை நவில்நீதியே
மனவர்க்க மற்றவனு பவமுற்ற சிற்கனவின் வலியோதுவாம். (89)

**பதவுரை:** நனவைத் துவக்கி முடி துரியத்தை முற்ற = சாக்கிரம் முதல் தொடங்கி, முடிவான துரியம் வரையில்; இறை நவில் நீதியே = குரு நாதர் கூறிய நியதிப்படி; மனவர்க்க மற்ற = மனதின் இனமான ரஜோ தமோ குணங்கள் நசிக்க; அனுபவமுற்ற = சுவானுபூதி பெற்ற; சிற் கனவின் வலி ஒதுவாம்=சித்தான சொப்பனத்தின் வலிமையைக் கூறுகின்றேன்.

**பொழிப்புரை:** சாக்கிரம் முதல் தொடங்கி, முடிவான துரியம் வரையில் குரு நாதர் கூறிய நியதிப்படி மனதின் இனமான ரஜோ,தமோ குணங்கள் நசிக்க, சுவானுபூதி பெற்ற சித்தான சொப்பனத்தின் **(சத்துவாபத்தி பூமியின்)** வலிமையைக் கூறுகிறேன் என்றான் சசிவன்னன்.

**சிற்கனவின் வலி ஓதுவாம்**- என்பது: **சற்சங்க(ம்) மனதில் உண்மை அறிவு உதித்தல் சத்துவாபத்திதானே** (அநாத்ம சம்ஸ்காரம் நீங்கப் பெற்று ஆத்ம சம்ஸ்காரத்தோடு கூடிய மனத்தின் கண் அவனுக்கு சொரூப சாட்சாத்காரம் (தன்னை அறிதல்) உண்டாதலே சத்துவாபத்தியாம் அதாவது உண்மை நிலை மருவுவதாம்) என்றும், **மூன்றாற் கப்பால் சொப்பனமாம்** (நான்காம் பூமியில் உலகம் சொப்பனம் போலப் பிரத்தியட்சமாக மித்தையாய்த் தோன்றுதலால் அது சொப்பன அவஸ்தையாம்) என்றும், **சொன்ன நடுப்பூமி வந்த ஞானிகளே பிரம வித்தாம் தூயமுத்தர்** (மகாவாக்கிய விசார ஞானத்தால் ஆவரணம் (மறைப்பு) நீங்க, பிரம்மத்தை பிரத்தியகாத்ம வடிவமாய் பிரத்தியட்சமாய் அறிந்தவனுக்கு இவ்வுலகம் சொப்பனம் போன்று தோன்றுவதாம். இவ்வாறு உலகை மித்தையாகப் பார்ப்பவனே பிரம்ம வித்து என அழைக்கப்படுகின்றான்).

## அவதாரிகை

பாடல் 90-முதல் 106 வரை, சசிவன்னன் துவம் பதமான சீவனின் மூன்று அவஸ்தைகளையும், தான் அனுபவித்த துரிய அவஸ்தையையும், தத்பதமான ஈஸ்வரனது அவஸ்தைகளை கண்டு,உணர்ந்து, துணிந்து, தெளிந்ததையும், அசிபதத்தினது மூன்று நிலைகளையும் மதித்து, கண்டு, அகோசரமாய் அறிந்ததையும்,அதைத் தன்னால் சொல்ல இயலாமையையும், ஈஸ்வரனது நடனத்தைக் கண்டு களித்ததையும் கூறி, இவற்றிற்கெல்லாம் காரணமான மானந்திபராயணரின் திருவடியில் உடல் பொருள் ஆவியோடு தான் சரணடைவதாகக் கூறல்.

**90-முதல் 93-வரையிலான பாடல்களில் தத்துவமசி மகா வாக்கியத்தின் துவம் பதப் பொருளின் அனுபவம்**

**வியஷ்டி சாக்கிரத்தின் அனுபவம் கூறல்**

புரண மாகவே புறம்புள புலன்களும் அந்தக்
கரணம் யாவையும் வழங்கிட நனவெனக் கண்டேன். (90)

**பதவுரை:** புரணமாகவே =நிறைவாகவே ; புறம்புள புலன்களும் அந்தக் கரணம் யாவையும் வழங்கிட = புறத்தில் உள்ள ஞானேந்திரிய ,கர்மேந்திரியங்களும், அகத்திலுள்ள அந்தக் கரணங்களான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் முதலிய எல்லாமும் உலாவிட ; நனவெனக் கண்டேன்= சாக்கிர அவஸ்தை என உணர்ந்தேன்.

**பொழிப்புரை :** நிறைவாகவே, புறத்தில் உள்ள ஞானேந்திரிய, கர்மேந்திரி -யங்களும், அகத்திலுள்ள அந்தக் கரணங்களான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் முதலிய எல்லாமும் உலாவிட, விசுவன் என்னும் அபிமானியாய் இருக்கும் நிலையே சாக்கிர அவஸ்தை என உணர்ந்தேன். **(சீவ சாக்கிரம்)**

**வியஷ்டி சொப்பனத்தின் அனுபவம் கூறல்**

புரண மாகவே புறம்புள புலன்கெட யந்தக்
கரணம் யாவையும் வழங்கிடம் கனவெனக் கண்டேன். (91)

**பதவுரை:** புரணமாகவே = நிறைவாகவே ; புறம்புள புலன் கெட = வெளியிலுள்ள ஞானேந்திரிய ,கர்மேந்திரியங்களும் ஒடுங்க: அந்தக் கரணம் யாவையும் =அந்தக்கரணங்களான மனம் முதலான அனைத்தும்;வழங்கிடம் =உலாவும் இடம் ; கனவெனக் கண்டேன்= சொப்பன அவஸ்தை என்று அறிந்து கொண்டேன்.

**பொழிப்புரை:** நிறைவாகவே வெளியிலுள்ள ஞானேந்திரிய, கர்மேந்திரி -யங்களும் ஒடுங்க, அந்தக்கரணங்களான மனம் முதலான அனைத்தும் உலாவும் இடம் தைஜஸன் எனும் அபிமானியாய் இருக்கும் நிலையே சொப்பன அவஸ்தை என்று அறிந்துகொண்டேன். **(சீவ சொப்பனம்)**



**வியஷ்டி சுழுத்தியின் அனுபவம் கூறல்**

மரண மாகிய திசைஇது எனும்படி மனாதி
கரணம் யாவையும் இறந்துள சுழுத்தியும் கண்டேன். (92)

**பதவுரை:** மரணமாகிய திசை இது = மரண நிலை போன்றது இது ; எனும்படி = என்பது போல்; மனாதி கரணம் யாவையும்=மனம்,புத்தி முதலான அந்தக்கரணங்கள் மற்றும் ஞானேந்திரிய, கர்மேந்திரியங்கள் அனைத்தும்; இறந்துள சுழுத்தியும் கண்டேன் = ஒடுங்கியிருந்த சுழுத்தி (தூக்க) அவஸ்தை -யையும் சீவனில் அறிந்து கொண்டேன்.

**பொழிப்புரை:** மரண நிலை போன்றது இது என்பது போல் மனம், புத்தி முதலான அந்தக்கரணங்கள் அனைத்தும் ஒடுங்கி பிராஞ்ருன் என்னும் அபிமானியாய் இருக்கின்ற சுழுத்தி (தூக்க) அவஸ்தையையும் சீவனில் அறிந்து கொண்டேன். **(சீவ சுழுத்தி)**

**வியஷ்டி துரியத்தின் அனுபவம் கூறல்**

எஞ்ச லின்றிஎக் கரணமும் இறந்துஇருண்டு இருந்த
துஞ்சல் அங்குணர் போதமாம் துரியமும் கண்டேன். (93)

**பதவுரை:** எஞ்சலின்றி =மீதம் எதுவுமின்றி = எக்கரணமும் = மனம்,புத்தி முதலான அந்தக்கரணங்கள் மற்றும் ஞானேந்திரிய, கர்மேந்திரியங்கள் அனைத்தும் ; இறந்து இருண்டு இருந்த = நசிக்கப்பட்டு சூன்யமாய் இருந்த ; துஞ்சல் அங்குணர் = ஒடுங்கியிருந்த சுழுத்தி அவஸ்தையில் ,அந்த சூன்யத்தை உணருகின்ற ; போதமாம் துரியமும் கண்டேன்= ஆன்ம சொரூப துரியத்தினை நான் தரிசித்தேன்.

**பொழிப்புரை:** மீதம் எதுவுமின்றி மனம்,புத்தி முதலான அந்தக்கரணங்கள் மற்றும் ஞானேந்திரிய, கர்மேந்திரியங்கள் அனைத்தும் நசிக்கப்பட்டு சூன்யமாய் ஒடுங்கியிருந்த சுழுத்தி அவஸ்தையில் அந்த சூன்யத்தை உணருகின்ற ஆன்ம சொரூப துரியமான சாட்சியே நான் என தரிசித்தேன். **(சீவ துரியம்)**

**94-முதல் 97-வரையிலான பாடல்களில் தத்துவமசி மகா வாக்கியத்தின் தத் பதப் பொருளின் அனுபவம்**

**சமஷ்டி சாக்கிரத்தின் அனுபவம் கூறல்**

துரிய மாகிய போதமோர் துளக்கமற்று அனைத்தின்
கரிய தாயிருந்த இடம்பர நனவெனக் கண்டேன். (94)

**பதவுரை:**துரியமாகிய போதம் = துரிய அவஸ்தையையுடைய கூடத்தன்; ஓர் துளக்கமற்று=ஓர் அசைவும் இல்லாமல்;அனைத்தின் கரியதாய் இருந்த இடம் = சிருஷ்டியில் இருக்கின்ற சகலத்திற்கும் சாட்சியாக இருந்த இடம்; பரன் நனவெனக் கண்டேன்= ஈஸ்வரனின் சாக்கிரம் என்று அறிந்தேன்.

**பொழிப்புரை:** துரிய அவஸ்தையையுடைய கூடத்தன் ஓர் அசைவும் இல்லாமல் சிருஷ்டியில் இருக்கின்ற சகலத்திற்கும் சாட்சியாக இருந்த இடம் ஈஸ்வரனின் சாக்கிரம் என்று அறிந்தேன். இதுவே விராட்டு அவஸ்தையாம். **(பர சாக்கிரம்)**

### சமஷ்டி சொப்பனத்தின் அனுபவம் கூறல்

புணர்ந்த இச்சகத் தொழித்துணர் போதமாம் தனையே
உணர்ந்த மற்றது பரன்கன வெனும்படி உணர்ந்தேன் (95)

**பதவுரை** புணர்ந்த இச்சகத்து ஒழித்து = கூடும் இந்த உலகினை நீக்கி; (உ)ணர் போதமாம் தனையே = தெளிவுடைய கூடத்த சாட்சியான தன்னையே ; உணர்ந்த மற்றது = அறிந்து கொண்ட அந்நிலையே ; பரன் கனவெனும்படி உணர்ந்தேன் = சமஷ்டி ஈஸ்வரனது சொப்பனம் என்று பகுத்து அறிந்தேன். இதுவே இரண்ணியகர்ப்ப அவஸ்தையாம்.

**பொழிப்புரை:** கூடும் இந்த உலகினை நீக்கி, தெளிவுடைய கூடத்த சாட்சியான தன்னையே அறிந்து கொண்ட அந்நிலையே சமஷ்டி ஈஸ்வரனது சொப்பனம் என்று பகுத்து அறிந்தேன். இதுவே இரண்ணியகர்ப்ப அவஸ்தையாம். **(பர சொப்பனம்)**

### சமஷ்டி சுழுத்தியின் அனுபவம் கூறல்

சான்று சாக்கியம் இறந்திடத் தானிருந் தமையும்
தோன்று றாவிடம் பரன்சுழுத் தியதெனத் துணிந்தேன். (96)

**பதவுரை:** சான்று சாக்கியம் இறந்திட = சாட்சியும் இந்தப் பிரபஞ்சமும் ஒடுங்கிட ; தான் இருந்தமையும் தோன்றுறா இடம் = சொரூப ஞானமாய்த் தான் இருந்தும் காணாத இடம்; பரன் சுழுத்தி அது எனத் துணிந்தேன் = ஈஸ்வரனின் சுழுத்தி அவஸ்தையாம் அது என்று உறுதி செய்தேன். இதுவே அந்தரியாமி அவஸ்தையாம்.

**பொழிப்புரை:** சாட்சியும் இந்தப் பிரபஞ்சமும் ஒடுங்கிட சொரூப ஞானமாய்த்தான் இருந்தும் காணாத இடம் ஈஸ்வரனின் சுழுத்தி அவஸ்தையாம் அது என்று உறுதி செய்தேன் . இதுவே அந்தரியாமி அவஸ்தையாம். **(பர சுழுத்தி)**

### சமஷ்டி துரியத்தின் அனுபவம் கூறல்

மரித்த தென்றுணர்ந் துரைத்தது மரித்திடந் தனிலே
தெரித்த போதமே ததுபரன் துரியமாய்த் தெளிந்தேன். (97)



**பதவுரை:** மரித்தது என்று உணர்ந்து உரைத்தது = (சுழுத்தியில் சகலப் பிரபஞ்சமும்) அழிந்தது என்று அறிந்து சொல்லியது; மரித்த இடந்தனிலே =ஒடுங்கிய சூன்யத்திலே ; தெரித்த போதம் எது = அவ்விதம் உணர்த்திய ஞானம் எதுவோ ; அது பரன் துரியமாய்த் தெளிந்தேன்= அதுவே ஈஸ்வரனின் துரிய நிலை எனத் தெளிந்தேன்.

**பொழிப்புரை:** சுழுத்தியில் சகலப் பிரபஞ்சமும் அழிந்தது என்று அறிந்து சொல்லியது, ஒடுங்கிய சூன்யத்திலே அவ்விதம் உணர்த்திய ஞானம் எதுவோ, அதுவே ஈஸ்வரனின் துரிய நிலை எனத் தெளிந்தேன். **(பர துரியம்)**

## 98 - முதல் 102 - வரையிலான பாடல்களில் தத்துவமசி மகா வாக்கியத்தின் அசி பதப் பொருளின் அனுபவம்.

### பிரம்ம சாக்கிரத்தின் அனுபவம் கூறல்

இறையெ னும்பொருள் துரியமே என்னைஆண் டவனே
மறையின் அந்தநற் பதப்பொருள் நனவென மதித்தேன். (98)

**பதவுரை:** இறையெனும் பொருள் துரியமே = இறைவன் என்று அழைக்கப்படுவது துரிய நிலையே; என்னை ஆண்டவனே = என்னை தடுத்தாட் கொண்ட குருவே; மறையின் அந்த நற்பதப் பொருள் = வேத மகா வாக்கியத்தின் அந்த அசிபதத்தின் ஐக்கியார்த்தம்; நனவென மதித்தேன் = பிரம்ம சாக்கிரம் என்று அறிந்தேன்

**பொழிப்புரை:** இறைவன் என்று அழைக்கப்படுவது துரிய நிலையே என்னை தடுத்தாட் கொண்ட குருவே! வேத மகாவாக்கியத்தின் அந்த அசிபதத்தின் ஐக்கியார்த்தம் **பிரம்ம சாக்கிரம்** என்று அறிந்தேன்

### பிரம்ம சொப்பனத்தின் அனுபவம் கூறல்

பண்டை விச்சுவ வாதனை பழுதுபோய் முழுதும்
கண்ட கண்ணதே யாகிய கனவதுவும் கண்டேன். (99)

**பதவுரை:**பண்டை விச்சுவ வாதனை =முன்னர் இருந்த இவ்வுலக வாசனையின்; பழுது போய் முழுதும் கண்ட = குற்றங்கள் யாவும் நீங்கி அனைத்தையும் தானாகவே காண்கின்ற ; கண்ணதேயாகிய = கண்ணோட்டத்தை உடைய; கனவதுவும் கண்டேன் = பிரம்ம சொப்பனத் -தையும் நான் அனுபவித்தேன்.

**பொழிப்புரை:** முன்னர் இருந்த இவ்வுலக வாசனையின் குற்றங்கள் யாவும் நீங்கி அனைத்தையும் தானாகவே காண்கின்ற கண்ணோட்டத்தை உடைய **பிரம்ம சொப்பனத்**தையும் நான் அனுபவித்தேன்.

### பிரம்ம சுழுத்தியின் அனுபவம் கூறல்

காட்சி யாவையும் கண்ணதா அக்கண்ணுங் கரை
மாட்சி யாகிய அகோசரம் உறக்கமாய் மதித்தேன். (100)

**பதவுரை:** காட்சி யாவையும் = திருசியமான அனைத்தையும்; கண்ணதா = காணப்படும் பொருளாய் ;அக்கண்ணும் கரை = அப்பார்வையும் நீங்கிய (ஞேய மாத்திரமாய்); மாட்சியாகிய அகோசரம் உறக்கமாய் மதித்தேன் = மேன்மை பொருந்திய அகோசர (புலன்களால் கிரகிக்க இயலாத)ப் பொருளை பிரம்ம சுழுத்தி என்று துணிந்தேன்.

**பொழிப்புரை:** திருசியமான அனைத்தையும் காணப்படும் பொருளாய், அப்பார்வையும் நீங்கிய(ஞேய மாத்திரமாய்)மேன்மை பொருந்திய அகோசர புலன்களால் கிரகிக்க இயலாத பொருளை **பிரம்ம சுழுத்தி** என்று துணிந்தேன்.

### பிரம்ம துரிய அனுபவம் கூறல்

அருந்த வாமறை அந்தமாம் அகோசரம் தனில்நீ
இருந்த வாறறி வித்தவா றெங்ஙன மிசைப்பேன். (101)

**பதவுரை:** அருந்தவா = அரிய தவத்தினையுடைய குருவே; மறை அந்தமாம் அகோசரம்தனில் = வேத முடிவான அவாங் மனோகோசரமான அதீதத்தில் (வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாததாய்); நீ இருந்தவாறு அறிவித்தவாறு = நீங்கள் இருந்த முறைமையையும், சீவன்முத்தி பெறக் கூறிய முறைமையையும்; எங்ஙனம் இசைப்பேன் = எவ்விதம் சொல்லுவேன்.

**பொழிப்புரை:** அரிய தவத்தினையுடைய குருவே ! வேத முடிவான அவாங்மனோகோசரமான அதீதத்தில் (வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாததாய்), நீங்கள் இருந்த முறைமையையும், சீவன் முத்தி பெறக் கூறிய முறைமை -யையும் எவ்விதம் சொல்லுவேன்.

### துரியாதீதப் பதத்தினைக் கூறல்

எம்பிரானிடந் தொறுமிடந் தொறுமது வதுவா
தம்பிரானடஞ் செயும்வகை சாற்றுமா றறியேன். (102)

**பதவுரை:** எம் பிரான் = எமது குருநாதரே! இடந்தொறும் இடந்தொறும் = காலம், தேசம், தேகம் தோறும்; அது அதுவா = கூடத்த பிரம்மமாய் ; தம்பிரான் = தனக்குத் தானான தலைவன் ; நடஞ் செயும் வகை = ஆனந்தக் கூத்தாடும் தன்மையினை ; சாற்றுமாறு அறியேன் = உரைக்கும் வகை அறிந்திலேன்.

**பொழிப்புரை:** எமது குருநாதரே ! காலம், தேசம், தேகம் தோறும் கூடத்த பிரம்மமாய் தனக்குத் தானான தலைவன், ஆனந்தக் கூத்தாடும் தன்மையினை உரைக்கும் வகை அறிந்திலேன்.



**விளக்கம்: தம்பிரான் நடம் செயும்வகை** என்பது :சுழுத்தியில் ஆனந்தம் அனுபவிக்கப்படுவது அனைவரின் அனுபவமாம்.சர்வமும் ஈஸ்வரனால் சிருஷ்டிக்கப்பட்டதால் இவன் எல்லோருடைய இதயத்திலும் இருக்கிறான்.இவன் ஆனந்த சொரூபன். சீவர்களின் நனவு, கனவு காலத்தில், விவகாரங்களில் விருத்திகளை அடைவதால் ஆனந்தமயனான ஈசன் மறைப்பைப் பெறுகின்றான். சுழுத்தியில், மூர்ச்சைக் காலத்தில், நிருவிகல்ப சமாதியில் விருத்திகள் இல்லை. அதனால் ஆனந்தம் ஒன்றே மிஞ்சுகின்றது. ஆனந்தம் வரும்போது நடனம் ஆடுவது என்பது இயல்பாம்.

அதனாலேயே மாணிக்கவாசகப் பெருமான் **நள்ளிரவில் நட்டம் பயின்றாடும்** நாதனே (நடு இரவில் அதாவது அயர்ந்த தூக்கத்தில் நடனம் புரிபவன்- ஆனந்தம் கொடுப்பவன்) என சிவபுராணத்தில் பாடுகிறார். துரியநிலையை அடைந்தோர் தம்பிரானாகிய நடராஜப் பெருமானின் ஆனந்தக் கூத்தை சதா காலமும் அனுபவித்துக் கொண்டே இருப்பார்கள் என்பதாம். துரியாதீத நிலை இதுவே.

எத்துணையும் பேதமுறா தெவ்வுயிருந்
தம்முயிர்போ லெண்ணி யுள்ளே
ஒத்துரிமை யுடையவரா யுவக்கின்றார்
யாவரவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமா னடம்புரியு
மிடமெனநான் தெரிந்தே னந்த
வித்தகர்தம் அடிக்குஏவல் புரிந்திட
என்சிந்தை மிகவிழைந்த தாலோ. -**திருவருட்பா**

(அனைத்து உயிர்களையும், பேதமற்று, தானாகவே பார்க்கின்ற அத்துவித நிலையைப் பெற்று, சதா சர்வ காலமும் பிரம்மானந்தத்திலேயே திளைத்திருப்பவரது உள்ளமே, ஜோதிப் பிரகாசமாய் ஒளிர்கின்ற, நடராஜப் பெருமான் நடனம் செய்து கொண்டிருக்கின்ற இடம் என்று உணர்ந்து கொண்டேன். அந்த அடியார்களின் திருவடிகளுக்கு அடிமையாக இருந்து பணி புரியவே என் மனம் விழைகின்றது என இராமலிங்கஅடிகளாரும், **எம்பெருமான் நடம் புரியும் இடம் என தெரிந்தேன்** என்கிறார்).

என்ன புண்ணியமோ செய்தேன் ஏது பாக்கியமோ காணேன்
நன்னிலம் தனில் எழுந்த நாரணன் கிருபையாலே
தன்னியன் ஆனேன் நான் உத்தரீயத்தை வீசுகின்றேன்
தன்னியன் நின்னு நானே தாண்டவம் ஆடுகின்றேனே. என்றும்

தத்துவ ஞானம் வந்த சந்தோட அதிசயத்தால்
நித்தம் ஆடுவன் காண் என்ற நிலை முன்னமே அறிந்த
சத்தியம் அதனா லன்றோ தாண்டவா என்ற ழைத்தார்
அத்தனை மகிமை யுள்ளோர் அன்னையும் பிதாவுந் தாமே.

(என்றும் கைவல்ய நவநீதத்தின் ஆசிரியர் ஸ்ரீமத் தாண்டவராய சுவாமிகள் தத்துவஞானத்தால் தான் அடைந்த ஆனந்த பெருக்கால் பூணூலை ஆகாயத்திலே தூக்கி எறிந்தேன் என்றும், பின்னாளில் தமது மகன் ஞானமடைந்து , அதனால் தினமும் நடனம் ஆடுவான் என்று முன்பே உணர்ந்த எனது தாயும் தந்தையும் தாண்டவா எனப் பெயர் சூட்டிய அவரது மகிமை என்னே ! என்றும் பாடியுள்ளார்.)

இதிலிருந்தே மகான்களது அனுபவத்தினை நாம் உணரலாம். எவரொருவர் தத்துவ ஞானம் அடைந்து, அதன் பலனாக ஈஸ்வரனது நடனத்தை தங்களது உள்ளத்தில் ஞானக்கண் கொண்டு தரிசனம் கிடைக்கப் பெறுவரோ. அவர் சதா சர்வ காலமும் பேரானந்தத்தி லேயே முழுகிக் கிடப்பார் என்பதனையே மேற்குறிப்பிட்ட ஞானிகளது பாடல்களிலிருந்து உணர்ந்து அந்நிலையை நாமும் பெற, எல்லாம் வல்ல ஈஸ்வரனது மலரடியை தொழுவாம்.

*சசிவன்னன் கைமாறு செய்வதாகக் கூறல்*

ஆவி யேஅடி யேன்செய்கை மாறுனக் கென்னெனில்
பாவி யேனது தானுமுன் னுடையதாம் பண்டே. (103)

**பதவுரை:** ஆவியே = எனது பிராண குருநாதனே ! உனக்கு = தேவரீருக்கு ; அடியேன் செய் கைமாறு என்னெனில் = இந்த அடியவன் செய்யக்கூடிய பதிலுதவி என்னவென்றால்; பாவியேன் = இந்த உடல், பொருள், ஆவி மூன்றும் தங்களைச் சரணடைந்த காலத்தே உம்முடையதானதால், இனி அவற்றை என்னுடையதாக பாவிக்க மாட்டேன்; அது தானும் = தானாகிய அப்பாவனையையும்; உன்னுடையதாம் பண்டே = முன்பே உம்முடையதாகிவிட்டது.

**பொழிப்புரை:** எனது பிராண குருநாதனே ! தேவரீருக்கு இந்த அடியவன் செய்யக்கூடிய பதிலுதவி என்னவென்றால், இந்த உடல், பொருள், ஆவி மூன்றும் தங்களைச் சரணடைந்த காலத்தே உம்முடையதானதால், இனி அவற்றை என்னுடையதாக பாவிக்க மாட்டேன். தானாகிய அப்பாவனையும் முன்பே உம்முடையதாகி விட்டது. (ஆகவே கைமாறு செய்ய இயலாதவனாய் இருக்கின்றேன் என்பதாம்.)

*அடியார் பணி செய்வதே தனது விருப்பம் எனல்*

ஆவல் செய்தென தாக்கையுள் ளளவுநின் னடியார்
ஏவல் செய்வதே யன்றிமற் றொன்றுநா னறியேன். (104)

***சசிவன்னனது உள்ளத்தில் எழுந்த அனுபவத்தின் பூரிப்பைக் கூறல்***

என்றுபல கால்விழும் எழும்தொழும் அழும்புரியும் என்னைஇனியான்
என்றுபல வாகஉரை செய்தஅவன் அன்பினைஎன் நெஞ்சுருகியே. (106)

**பதவுரை:** என்று பலகால் விழும் எழும் தொழும் அழும் புரியும் என்னை = என்று இவ்விதம் கூறி, பலமுறை குருவின் பாதங்களில் வீழ்ந்து, நமஸ்கரித்து, எழுந்து, கரங்களால் துதித்து, ஆனந்தக் கண்ணீர் சொரிய அழுது கொண்டிருக்கும் என்னை; இனி = இது முதலாக ; யான் = தான் ; பலவாக என்று உரை செய்த= காணப்படும் பொருளே (ஞேய மாத்திரமாக) என்பதாக சொல்லிய; அவன் அன்பினை என் நெஞ்சுருகியே = குருவின் அன்பினை (கருணையை நினைக்க) எனது உள்ளம் உருகுகிறது என்றான்.

**பொழிப்புரை:** என்று இவ்விதம் கூறி , பலமுறை குருவின் பாதங்களில் வீழ்ந்து, நமஸ்கரித்து,எழுந்து ,கரங்களால் துதித்து ,ஆனந்தக் கண்ணீர் சொரிய அழுது கொண்டிருக்கும் என்னை, இது முதல், தான்,காணப்படும் பொருளாய், ஞேய மாத்திரமாய் என்பதாக சொல்லிய குருவின் அன்பினை, கருணையை நினைக்க எனது உள்ளம் உருகுகிறது என்றான்.

**விளக்கம்: இனியான் என்று பலவாக உரை செய்த** என்பது: **நித்தமும் வெளி போல் பற்றா ஞேயமாத்திரமாய்ச் சீவன் முத்தரானவர் ...** (எப்போதும் ஆகாயம் போல் எதனையும் பற்றாது சகலத்திற்கும் இடம் கொடுத்து, காணப்படும் பொருளே தானாய்,சீவன் முத்தரானவர்....) என்று கைவல்யமும் கூறுகிறது. **இனி, யான், பலவாக என்று** என்பது, (கூடத்தனாகிய) தான், (காண்பானும் காட்சியும் நீங்கிய), காணப்படும் பொருளாக (ஈஸ்வரனாக) கொடுக்கப்பட்டிருப்பது இலட்சியார்த்தப் பொருளாகும் . என்னை இனியவன் என்றும், பக்குவம் உடையவன் என்றும் பலவிதமாக குரு பாராட்டினார் என்பது வாச்சியார்த்தமாம். மேலும் இந்நூலாசிரியரே 82-ம் பாடலில்

**அத்துரிய நிலை சீவனே இவிதத்தில் அப்புருடன் நனவுற்ற அத்துரிய நிலை ஈசனே** என்று கூறுவதும் ஒப்ப நோக்கத்தக்கது.

***சசிவன்னன் வீடு பெறுவதில் ஐயமில்லை என்கிறார்***

ஏட்டிலறி வின்றிஇறை தன்னிலறி வின்றியிவ் வுடம்பினுடனே
வீட்டிலுறை வானையினி வீடுபெறும் என்பது விளம்புகிலமே. (107)

**பதவுரை** : ஏட்டில் அறிவின்றி = சாஸ்திர அறிவு இல்லாமலும்; இறை தன்னில் அறிவின்றி =(இறை என்னும் பொருள் துரியமே என்றபடி) துரிய நிலையைப் பற்றிய அறிவு இல்லாமலும்; இவ்வுடம்பினுடனே = தூல,சூக்கும, காரண தேகங்களோடு; வீட்டில் உறைவானை = பிறவி என்னும் வீட்டிலே கணித்தற்கியலாத ஜன்மங்களாக வாழ்ந்து கொண்டிருப்பவனை ; இனி வீடு



பெறும் என்பது விளம்புகிலமே = பிரம்ம ஞானமடைந்து சர்வ துக்க நிவர்த்தி, பரமானந்த பிராப்தியான முக்தி பேற்றினை அடைவான் என்று சொல்லத் தேவையே இல்லையாம்.

**பொழிப்புரை:** சாஸ்திர அறிவு இல்லாமலும், இறை என்னும் பொருள் துரியமே என்றபடி - துரிய நிலையைப் பற்றிய அறிவு இல்லாமலும், தூல, சூக்கும, காரண தேகங்களோடு, பிறவி என்னும் வீட்டிலே கணித்தற்கியலாத ஜன்மங்களாக வாழ்ந்து கொண்டிருப்பவனை, பிரம்ம ஞானமடைந்து சர்வ துக்க நிவர்த்தி, பரமானந்த பிராப்தியான முக்தி பேற்றினை அடைவான் என்று சொல்லத் தேவையே இல்லையாம்.

**விளக்கம்: ஏட்டில் அறிவின்றி இறை தன்னில் அறிவின்றி** என்பது:

மனைக்குள் வைத்த பண்டங்களை மறந்தவன் வருட நூறமுதாலும்
நினைத்துணர்ந்த பின் கிட்டும் அப்படி யிந்த நின்மல ஆன்மாவும்
அனர்த்தமான தன் மறதியைக் கெடுத்து தன்னறிவினாற் காணாமல்
கனத்த கர்மங்கள் நூறுகஞ் செய்யினுங் காணுமோ காணாதே. -**கைவல்யம்**

(வீட்டில் வைத்த ஒரு பொருளை மறந்து, பல வருடங்கள் தேடினாலும் கிடைக்காது. முன் வைத்த இடத்தை ஞாபகத்திற்கு கொண்டு வரின், அப்பொருள் கிடைக்கும். அப்படியே ஆன்மாவையும்,அனர்த்தமான மறதியைக் கெடுத்து தன் அறிவினால் காணாமல், கர்மங்களை அனேக பிறவிகளில் செய்திடினும் காண இயலுமோ ? இயலாது என்பதாம்.)

மோட்சமடைய,வேத உபநிஷத்துக்களின் மகா வாக்கிய இலட்சியார்த்த அறிவைப் பெற்றிட வேண்டும்.இதற்கு குருமகான் தரிசனம் வேண்டும். அவரால் மட்டுமே மகாவாக்கிய உபதேசமும், சாத்திர ஞானமும் கிடைக்கும்.முக்தியும் அடையப் பெறலாம்.

நிஷ்காமிய கர்மத்தின் பலனால் மலங்கள் ஒழிந்து, ஈஸ்வர நமோச்சரணத்தினால் விட்சேபம் நீங்கியவனுக்கு நான்கு சாதனங்கள் உண்டானால், பிரம்ம ஞானம் பெற குரு தரிசனம் கிடைக்கும் என்று சாத்திரங்கள் சொன்னாலும், அப்படியின்றி ஞானிக்கு சேவை புரிவதனாலும் நான்கு சாதனங்களை அடைந்து, குரு உபதேசத்தால் ஞானம்பெற்று வீடடையலாம் என்று கூறவும் வேண்டுமோ? என்கிறார்.

***சசிவன்னனது பிதிரர்கள் உம்பர் பதம் அடைதல்***

வஞ்சவலி யால்நரகின் வீழ்பிதிரர் அந்நரகு பாழ்படஇவன்
விஞ்சைவலி யாலடைய ஏறினர் சுராதிபர்கண் மேலுலகமே. (108)

**பதவுரை:** வஞ்ச வலியால் நரகின் வீழ் பிதிரர் = வஞ்சகமான செயல்களை முன்னம் இவன் புரிந்ததன் விளைவாக, நரகத்தில் வீழ்ந்த இவனது பிதிரர்கள்;

அந்நரகு பாழ்பட = அந்த நரகம் சூன்யமாகும்படி ; இவன் விஞ்சை வலியால் = இந்த சசிவன்னனது ஞான சக்தியினால்; சுராதிபர் கண் மேலுலகமே அடைய ஏறினர் = இந்திரன் முதலானோர் இருக்கின்ற சொர்க்கலோகத்தினை அனைவரும் அடைந்தனர்.

**பொழிப்புரை:** வஞ்சகமான செயல்களை முன்னம் இவன் புரிந்ததன் விளைவாக, நரகத்தில் வீழ்ந்த இவனது பிதிரர்கள், அந்த நரகம் சூன்யமாகும்படி இந்த சசிவன்னனது ஞான சக்தியினால் ,இந்திரன் முதலானோர் இருக்கின்ற சொர்க்கலோகத்தினை அனைவரும் அடைந்தனர்.

இவனுடைய தந்தையெனும் பாகயஞ்ஞன்
இவ்விதமே ஆனந்தபராயணன் தன்
பவமறு நற் பணிவிடையே அன்பினோடும்
பண்ணி அவனருளிய வேதாந்த ஞானம்(ம்)
நவையறவே எனதருளால் நன்றாய்ப் பெற்று
நவையான பவபந்தம் விடுத்தான் மற்றும்
அவனுடைய நரகம் சேர் பிதிர்கள் எல்லாம்
அவ்விச்சை உரத்தால் நற்கதியே சென்றார். **(24)**

(சசிவன்னனது தந்தையான பாகயஞ்ஞனனும்,சசிவன்னனின் குரு சேவையால்,மானந்திபராயணன் அருளிய தத்துவ ஞானத்தால், எனது (மகாதேவனது) அருளால் தோஷமுடைய பிறவியையும் பந்தத்தையும் விடுத்தான்.மேலும் இவன் புத்திரன் சசிவன்னன், சீவன் முத்தனாகிய பலத்தால், நரகத்தில் வீழ்ந்த இவன் குலம் மேவிய தென்புலவாணர்கள் அனைவரும் நற்கதி அடைந்தனர்.)

அவனுடைய குலமெல்லாம் புனிதமாயிற்று
அவனி எல்லாம் அவனாலே சுத்தமாயிற்று
இவனுடைய பரவிச்சைப்பலத்தினாலே
இவன் முன்னங் கூடிய அச்சண்டாளப்பெண்
சுவைமருவுஞ் சொர்க்கத்தைச் செறிந்தாள்
இன்னோன் சுற்றத்தார்இட்டத்தார் எவரும் சொர்க்கம்
கவலையறச்சென்றார்கள் ஞானி தம்மின்
களங்கமிலாப் பணிவிடையின் பெருமை என்னே. **(25)**

(சீவன்முத்தனான சசிவன்னனது குலத்தைச் சேர்ந்தோரெல்லாம் தூயவரானார்கள். உலகம் அனைத்தும் சுத்தமாயிற்று.இவனது பர இச்சையால் முன்பு அவனோடு கூடியிருந்த அந்த சண்டாளப் பெண் சொர்க்கமடைந்தனள்.



இவனது உறவினர்கள்,நண்பர்கள் யாவரும் சோகமின்றியவரானார்கள். ஞானிக்கு செய்த பணிவிடையின் சிறப்பைக் கூற வார்த்தைகள் ஏது?

### பிரம்ம ஞானியின் சிறப்பைக் கூறல்

தேவரு மனித்தரும் இவன்தொழில் வியந்துரை செயப்படுவதோ
மூவரும் வணங்கிமுடி யால்அவனது ஏவல்செய முந்துறுவரே. (109)

**பதவுரை:** தேவரும் மனித்தரும் இவன் தொழில் வியந்து உரை செயப்படுவதோ = தேவர்களும் மனிதர்களும் இந்த மகானின் மகிமையை அதிசயித்து கூறத்தக்கதோ? ; மூவரும் = பிரம்மா,விஷ்ணு ,சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் ; வணங்கி முடியால் = சிரம் தாழ்த்தி; அவனது ஏவல் செய முந்துறுவரே = அந்த ஞானியின் நோக்கம் உணர்ந்து அவனது சங்கற்பங்களை நிறைவேற்ற முன் வருவார்கள்.

**பொழிப்புரை:** தேவர்களும் மனிதர்களும் இந்த மகானின் மகிமையை அதிசயித்து கூறத்தக்கதோ? பிரம்மா,விஷ்ணு ,சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் சிரம் தாழ்த்தி அந்த ஞானியின் நோக்கம் உணர்ந்து அவனது சங்கற்பங்களை நிறைவேற்ற முன் வருவார்கள்.

ஈசனா ஞானி இருந்துள விடத்தே இருப்பது முத்திதா னந்தத்
தேசிக னேவல் செய்பவன் காலென் சென்னியி லிருப்பது மன்னி
மாசிலாப் பரம ஞானியா முனிக்கு மகேசனும் ஒப்பலன் மதிக்கில்
ஆசிலா அரியு மொப்பலன் நானு மொப்பலன் எவர் ஒப்பாரே.

**- பிரம்ம கீதை**

(ஈஸ்வர சொரூபனாகிய ஞானி இருக்கும் இடத்தே இருப்பது மோட்சந்தான். அக்குருவிற்கு பணிவிடை செய்கின்றவர்களுடைய பாதம் எனது தலை மீது வைத்துள்ளேன். குற்றமற்ற அந்த ஞானியான முனிவரனுக்கு உருத்திரனும் சமமாக மாட்டான். விசாரித்திடில் விஷ்ணுவும் ஒப்பாகமாட்டான். பிரம்மாவாகிய நானும் சமமாகமாட்டேன் என்றிடில் ,வேறு எவர் தாம் நிகராவார்கள்.)

ஞாலம் உண்டவன் தலைமிசை சுமப்பன்
மெய்ஞ்ஞானி வேண்டுவதெல்லாம்
ஆலம் உண்டவன் அவன் பின்னே
திரிகுவன் அவனடித் துகட்கன்றோ
சீல மன்னரும் மற்றுள தேவரும்
திசைதிசை பணிந்தேத்தக்
கால் இரண்டையும் தலைமிசை
வையெனக் கழறுவன் கமலத்தோன்.

(வாமன வடிவெடுத்து பூமியை விழுங்கிய விஷ்ணு, சீவன் முத்தன் விரும்புவதை தலை மேல் வைத்து சுமப்பான். (பாற்கடலைக் கடையும்போது வெளிப்பட்ட) விஷத்தை சாப்பிட்ட சிவன், சீவன்முத்தர் அடியை பின்பற்றியே அவர்கள் பின்னாலேயே செல்வான். மகாராஜாக்களும், மற்றுமுள முப்பத்து முக்கோடி தேவர்களும், சீவன்முத்தன் செல்லும் திக்கெல்லாம் பணிந்து துதிப்பார்கள். பிரம்மா தனது தலை மேல் சீவன்முத்தனது கால்கள் இரண்டையும் வைக்க வேண்டி உரக்க சப்தமிடுவான். **தாற்பரியம்:** சீவன்முத்தனது சங்கற்பங்களை சடுதியில் நிறைவேற்றுவர் என்பது.

ஈஸ்வரனே ஞானி எனல்

ஞானியை நரன்சுரன் எனாதொழிக ஞாலமுய நாதனருளால்
மேனியது கொண்டுதனை நல்கவரும் என்றறையும் வேதமுடிவே. (110)

**பதவுரை:** ஞானியை நரன் சுரன் எனாது ஒழிக = முத்தனை, மனிதன் மற்றும் தேவன் என்று சொல்ல வேண்டிய தில்லை ; ஞாலம் உய்ய நாதன் அருளால் = இவ்வுலகத்தில் சீவர்கள் வாழும் பொருட்டு, ஈஸ்வரனின் அருளால்; மேனியது கொண்டு = பிரம்ம ஞானியாக மானிட உடலைத் தரித்து ; தனை நல்க வரும் = தம்மை நாடி வருபவர்களின் பிறவித் துன்பத்தை நீக்கி முக்தியைக் கொடுக்க வரும் ; என்று அறையும் வேத முடிவே = என்பதே நான்கு வேதங்களின் முடிவாம்.

**பொழிப்புரை:** சீவன் முத்தனை, மனிதன் மற்றும் தேவன் என்று சொல்ல வேண்டியதில்லை இவ்வுலகத்தில் சீவர்கள் வாழும் பொருட்டு, ஈஸ்வரனின் அருளால் பிரம்ம ஞானியாக மானிட உடலைத் தரித்து தம்மை நாடி வருபவர்களின் பிறவித் துன்பத்தை நீக்கி முக்தியைக் கொடுக்க வரும் என்பதே நான்கு வேதங்களின் முடிவாம். **சீவன் முத்தரைச் சேவித்தோர்... சன்மப் பாவனமானார் என்று பழமறை முழங்கும்....** என்று கைவல்யமும் கூறும். (சீவன்முத்தருக்கு சேவை புரிந்தவர்களும், வழிபட்டவர்களும் இப்பிறவிப் பயனை நிச்சயம் அடைவார்கள் என்று வேதங்கள் முழுங்குகின்றன என்பது.)

நூலை முடிக்கின்றார்

மூல மான மறைப்படி மூலமே
கோல மான பரிசுகள் கூறுவாம். (111)

**பதவுரை:** மூலமான மறைப்படி = ஆதியான வேத உபநிஷத்துக்கள் கூறியபடி ; மூலமே கோலமான = அதனையே அழகுடன் ; பரிசுகள் கூறுவாம் = சீவர்களின் நன்மைக்காக இச்சசிவன்னன் சரித்திரத்தைக் கூறினதாம்.



**பொழிப்புரை:** ஆதியான வேத உபநிஷத்துக்கள் கூறியபடி , அதனையே அழகுடன், சீவர்களின் நன்மைக்காக இச்சசிவன்னன் சரித்திரத்தைக் கூறினதாம்.

மூவருமாய் நின்றோனே சசிவன்ன ஞானியே
மங்களம் ஜய மங்களம்
நின் குருசேவையின் மகிமை யென்னே
மங்களம் ஜய மங்களம்

**முற்றிற்று.**



சசிவன்ன போதம் என்னும் இந்த நூலை அருளிச் செய்த
**சுரோத்திரியப்ரஹ்மநிஷ்ட**
**ஸ்ரீ தத்துவராய சுவாமிகள்**



# ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் அதிஷ்டானம்

விருத்தாச்சலம் அடுத்த எறும்பூர்.






# ஸ்ரீ நந்தி பாராயணர் கருவறை

விருத்தாச்சலம் அடுத்த கோபுராபுரம்.



# ஞானி சசிவன்னரின் கருவறை

விருத்தாச்சலம் அடுத்த கோபுராபுரம்.



## செய்யுள் முதற் குறிப்பு அகராதி

## செய்யுள் முதற் குறிப்பு அகராதி





